Regd. No. 2975

ஸ்ரீ:



# ஸ்ரீ ராமாநுஜன் 316.

ஆசிரியர்: P. B. அண்ணங்கராசாரியர்.

# SRI RAMANUJAN

Editor:

*Mahamahimopadhyaya*

P. B. ANNANGARACHARYA, KANCHIPURAM-631503.

வருஷச் சந்தா ரூ. 10. ஜீவியச் சந்தா ரூ. 100



பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.



ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.



ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி*
தாழ்வாது மில்குரவர் தாம்வாழி—ஏழ்பாரு
முய்ய வவர்க ளுரைத்தவைகள் தாம்வாழி*
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.



1974ஆ ஐப்பசிமாத வெளியீடு

அடியேன் அக்காரக்கனி அனந்தாழ்வான் செய்யும் விண்ணப்பம்.

கீழ் இரண்டு மூன்று வருஷகாலம் ஸ்ரீமத் P. B. A. ஸ்வாமி; வாசித்தல், எழுதுதல் ஆகிய இரண்டையும் பராதீனமாகவே வைத்துக்கொண்டிருந்ததைப் பெரும்பாலோர் அறிவர். சென்ற மாசி பங்குனியில் நேத்ர சிகித்ஸை பெற்ற பின்பு சென்ற வைகாசி மாதத்திலிருந்து வாசித்தல் எழுதுதலென்கிற விரண்டையும் ஸொந்தமாகவே வைத்துக்கொண்டிருந்தார். இவ்விரண்டையும் மிகவும் குறைத்துக்கொள்ளவேணுமென்று ஸமீபகாலத்தில் டாக்டர் எச்சரிக்கை செய்ததிலிருந்து இவற்றை மிகவும் குறைத்துக்கொள்ள நேர்ந்திருக்கின்றது. தினப்படி வரும் நாற்றிசைக் கடிதங்களை யெல்லாம் அடியேனே வாசித்துக் காட்டிவருகின்றேன். ஸமீபகாலத்தில் வெளிவரத் தொடங்கியுள்ள மஹாநிதியைப்பற்றிப் பல மஹான்களின் கடிதங்கள் கிடைத்துவருகின்றன. முக்கியமாகச் சில பெரியார்களின் திருநாமங்களைக் குறிப்பிடுகின்றேன். ஸ்ரீமதுபயவே. வானமாமலை வித்வான் ஸ்ரீநிவாஸய்யங்கார் ஸ்வாமி; கோவை வேதவியாஸ பட்டர் திருமலை ஐயங்கார் ஸ்வாமி, (பெங்களூர்), டாக்டர் V. ராமையங்கார், ஸ்ரீமத் பரமஹம்ஸ யதுகிரி யதிராஜ ஜீயர்ஸ்வாமி, மதுரை பேராசிரியர் R. ரங்கராஜையங்கார், M. A., (Bombay) N ரங்கராஜய்யங்கார், மதுராந்தகம் தையார் லங்கீபுரம் ரங்கராஜாசாரியார், சென்னை N, வேணுகோபாலநாய்க்கர் B.A., B.L., திருக்கோயில்பத்திராதிபரான உயர்திரு N. R. முருகவேள்; M. A. M. O. L., அவர்கள், மயிலை N. பக்தவதஸலையங்கார், M. A. M. O. L., ஸ்வாமி, திருவல்லிக்கேணியில் ஸ்ரீ V. V. ராமாநுஜம் முதலான பல ஆப்தர்கள்.........இவர்களில் ஒவ்வொருவருடைய கடிதமும் மிக விரிவானவை. ஒவ்வொன்றும் சுவைமிக்கவை. இவற்றை நான் ஸ்ரீ ஸ்வாமிக்கு வாசித்துக்காட்டும்போது 'உளளெலாமுருகிக் குரல்தழுத்தொழிந்தேன்' என்கிற நிலைமையையே அடைந்திருந்தேன். ஒன்றையும் உபேக்ஷியாமல் எல்லாவற்றையும் வெளியிடவேணுமென்ற தோன்றிற்று. அவகாசமில்லை. என்னசெய்வேன்? ஒவ்வொரு கடிதத்திலுமுள்ள சிற்சில வார்த்தைகளைத் திரட்டி இதன்கீழ் சுருக்கமாக வெளியிடுகிறேன். சென்னையில் வாழும் உ. வே. (திருச்சேறை) T. S. திருமலாசாரியர் ஸ்வாமியின் நீண்ட திருமுகமமட்டும் அடுத்த இதழில் வெளியிடப்படும்.

நாலுவருஷங்களுக்குமுன்பு நமது காஞ்சீபுரம ஸ்வாமிகளுக்கு சதாபிஷேக மஹோத்ஸவக் கொண்டாட்டம் திருவல்லிக்கேணி ஸ்ரீ பார்த்தஸாரதி ஸ்வாமி தேவஸ்தானத்தில் ஆண்டாள் சன்னிதிமுன்னிலையில் பெருந்திரளாக நடந்தபோது ஸ்வாமியைப் பற்றிப பலப்பல பெரியார்கள் எழுந்து பேசுகையில், இப்போது எங்குமோங்கிய புகழாளராக விளங்கிவரும் ஸ்ரீ ஸ்ரீமந்நாராயண ராமாநுஜ ஜீயர்சுவாமிகள் பேசின பேச்சுக்கள் வெகு அருமையாக இருந்தது. (அதாவது) நம் அண்ணங்கராசாரியார் சுவாமி இதுவரையில் எழுதி அச்சு போட்டிருக்கிற கிரந்தங்களில் ஒவ்வொரு காபியை மட்டும் வைத்து அடுக்கிக்கொண்டுபோனால் இந்த ஸன்னிதிகோபுர சிகரம் வரையில் போகும் என்பதில சந்தேகமில்லை என்று சாதித்தார். அப்படி அவர் சாதிக்கும்போது முகமலர்ச்சியோடு புன்முறுவலோடு கேட்டுக்கொண்டிருந்த ஸ்ரீமான்களான—பிரபல அட்வகேட்டுகளான V. N. வெங்கடவரதாசாரியார் சுவாமி, சம்பத்கசய்யங்கார் சுவாமி, C S பார்த்தஸாரதி ஐயங்கார் சுவாமி போல்வாரையும் கண்டிருக்கிறேன். முகம் கவிழ்ந்துபோய் தலையைத் தொங்கவிட்டுக்கொண்டிருந்தவர்களையும் கண்டிருக்கிறேன். உட்கார்ந்திருக்கப் பிடிக்காமல் எழுந்து அப்ரதக்ஷிணமாகக் கனவேகமாய்ச் சென்றவர்களையும் கண்டிருக்கிறேன்.

(இதன் தொடர்ச்சி [illegible] பக்கம் காண்க)

# ஸ்ரீ ராமாநுஜன்—516



ஆசிரியர்:
மஹாமஹிமோபாத்யாய ஸ்ரீ காஞ்சி ப்ரதிவாதிபயங்கரம்
அண்ணங்கராசாரியர்.

ஸம்புடம் 27 | ஆனந்த ஹு ஐப்பசி மாத வெளியீடு | ஸஞ்சிகை 6

## மறுபதிப்பேறின நூல்களின் விளம்பரம்

நமது ஸ்ரீ ராமாநுஜன் ஆசிரியரான ஸ்ரீமத் P. B. A. ஸ்வாமிகளின் வியாக்கியான நூல்களில், நாலைந்து வருஷகாலமாக துர்லபமாயிருந்தவை மறுபதிப்புச் செய்யப்பட்டுவருகின்றனவென்பதை ஏற்கனவே அறிவித்திருந்தோம். திவ்யப் பிரபந்த வியாக்கியானங்களிலும் பூர்வாசார்ய ஸ்தோத்ர வியாக்கியானங்களிலும் துர்லபமாயிருந்தவை பெரும்பாலும் மறுபதிப்பேறி அபேக்ஷகர்களுக்குக் கிடைக்கக் கூடியவையாகவுள்ளன.

1. திருவாய்மொழி திவ்யார்த்த தீபிகையுரையில் 2, 4, 6, 7 பத்துக்களின் மறுபதிப்பு முடிவு பெற்றது. இப்போது எல்லாப் பத்துக்களும் கிடைக்கும்.

2. இயற்பா ஆயிரத்தில் நான்கு திருவந்தாதிகளின் மறுபதிப்பும் முடிவு பெற்று. இவ்வாயிரம் பூர்த்தியாகக் கிடைக்கும்.

3. முதலாயிரத்தில் பெருமாள் திருமொழி திவ்யார்த்ததீபிகை மறுபதிப்பு முடிவுபெற்று இவ்வாயிரமும் பூர்த்தியாகக் கிடைக்கும்.

4. பெரியதிருமொழியாயிரத்தின் தீபிகை மறுபதிப்பு சென்றவாண்டிலேயே பூர்த்தியாகிவிட்டதென்பது அன்பர்களுக்கு நினைவிருக்கும். ஆகவே இப்போது நாலாயிரதிவ்வியப்பிரபந்தத்திற்கு ஸ்ரீ ஸ்வாமியின் தீபிகையுரை எதுவும் குறைவில்லாமல் பூர்த்தியாகக் கிடைக்குமென்றுணர்க. முழுமைக்கும் விலை (கமிஷன் தள்ளி) நூறு ரூபா மட்டும். தனித்தனிப் புத்தகங்களின் விலை கியாடலாக தருவித்துக் காண்க.

5. பூர்வாசார்ய ஸ்தோத்ரவுரைகளில் மறுபதிப்பாக வேண்டியிருந்தவற்றில் ஸ்ரீரங்கராஜஸ்தவ—உத்தரசதக வியாக்கியானம். 2. முகுந்தமாலை வியாக்கியானம். 3. யதிராஜவிம்சதி வியாக்கியானம்—இம்மூன்றும் ஸமீப காலத்தில் மறுபதிப்பாகி முடிந்திருக்கிறது. ஸ்ரீ ஸுதர்சந சதகவியாக்கியானம் சென்றவாண்டிலேயே மறுபதிப்பாகி முடிந்திருப்பது அன்பர்களறிந்ததேயாம்.

6. அண்ணாஸ்வாமியின் அமுதமொழியாயிரம்

ஐந்நூறு அமுத மொழிகள் கொண்ட முதற் பகுதி மூன்றாண்டுகட்கு முன்பு வெளிவந்து உலகம் பரவியுள்ளது. அதன் பிற்பகுதியும் (501—1000 அமுத மொழிகள்) இப்போது முடிவுபெற்று வெளிவந்துள்ளது. விலை 5 ரூ. போஸ்டேஜ் தனி.

7. கண்ணனும் அண்ணனும் '' பேசியவை.

இந்நூல் ஸ்ரீ ராமாநுஜனில் ஆரம்பமாகி ஏழெட்டிதழ்களில் வெளிவந்து முடிவு பெறாமல் நின்றிருந்தது; இஃது ஒருவாறு முடிவுபெற்றுத் தனிப்புத்தகமாக வெளிவந்துள்ளது. விலை (தபாற் செலவுடன்) ரூ. 2—00.

இங்ஙனம், தி. அ. அக்காரக்கனி அனந்தாழ்வான்.

---

# முக்கியமாகக் கவனிக்கவேண்டிய அறிவிப்பு

(அடியேன் அனந்தாழ்வான் விஜ்ஞாபிப்பது)

ஸ்ரீ ஸ்வாமியின் உபந்யாஸங்கள் 1910 ஆம் வருஷம் முதலாக மாதப் பத்திரிகைகள் மூலமாகவும் தனிப்புத்தகங்களாகவும் வெளிவந்தவை ஆயிரக்கணக்கில் தேறுகிறபடியால் இக்காலத்தவர்களுக்குக் கிடைக்க வழியில்லாமலிருந்த அவற்றை மாலைமாலையாக அச்சிட்டு வெளியிடவேணுமென்று சிலபெரியார்களின் நியமனத்தைச் சிரமேற்கொண்ட அடியேன் **அண்ணாஸ்வாமியின் உபந்யாஸ மாலை** யென்னும் பெயர்கொண்டவொரு ஸஞ்சிகையை வெளியிடத் தொடங்கி ஐந்தாறுமாதமாயிற்றென்பதை உலகமறியும். அதில் 30 உபந்யாஸங்கள் வெளியிடப்பட்டிருக்கின்றன. அவை புராதனங்களான உபந்யாஸங்களாதலால் புதிய உபந்யாஸங்களையும் எழுதி வெளியிடவேணுமென்று விருப்பங்கொண்ட ஸ்ரீ ஸ்வாமி **திவ்யப்ரபந்த மஹாநிதி** எனனும் பெயர்கொண்ட ஒரு பெரிய நூலைச் சென்றமாதத்தில் எழுதத் தொடங்கினார். இது பூர்த்தியாக எழுதப்பட்டு முடிந்த பின்பு அச்சிடுவதென்பது பயன்படாத காரியமென்று தோன்றினபடியால் இதையும் மேலே குறித்த "அண்ணாஸ்வாமியின் உபந்யாஸ மாலை"யிலேயே சேர்த்து வெளியிடத் தொடங்கி (அந்த மாலையின் ஐந்தாவது இதழாகச்) சென்ற மாதத்தில் வெளிவந்துள்ளது. ஏற்கனவே 27 வருஷகாலமாக நடைபெற்றுவருகிற ஸ்ரீராமாநுஜனும் தனியாகவும் அந்த உபந்யாஸமாலை (அநுபந்தமாகத்) தனியாகவும் வெளிவந்துகொண்டிருக்கின்றது. இப்படி தனித்தனியே இரண்டு ஸஞ்சிகைகளாக வெளிவருவதால் சில அசௌகர்யங்கள் தோன்றியுள்ளன. அதை விவரிக்கத் தேவையில்லை. இனி இரண்டாகவல்லாமல் ஒன்றேயாக்கிவிட முடிவு செய்யப்பட்டது. **ஸ்ரீ ராமாநுஜன்** என்ற பெயரிலேயே வெளிவரும். திவ்யப்ரபந்தமஹாநிதி ஸ்ரீராமாநுஜனிலேயே சேர்ந்து வெளிவருமாதலால் அதற்குத் தனிச்சந்தா செலுத்தவேண்டியதில்லை. தனிச்சந்தா செலுத்தியுள்ள சிலநபர்களின் தொகையை அடுத்த வருஷத்தின் சந்தாவரவாகப் பதிவுசெய்து கொள்ளுகிறோம். அல்லது க்ரந்தமாலைப் பதிப்புகளில் ஏதேனும் புத்தகம் விரும்பிப் பெற்றுக்கொள்ளலாமவர்கள்.

**அவசியமான அறிவிப்பு:—** திவ்யப்ரபந்த மஹாநிதியின் தொடர்ச்சி இச்சஞ்சிகையில் வெளிவருவதால், (அ. ஆ. இ) என்னும் மூன்றெழுத்துக்களின் விவரணங்கொண்ட முன்னிதழைப் பெறவிரும்புமவர்கள் ஒரு ரூபா செலுத்திப் பெறவேண்டியது. அன்னவர்கள் "மஹாநிதியின் முதலிதழ் தேவை" என்று எழுதவேண்டும்.

ஸ்ரீ:



ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

நம்பிள்ளை திருவடிகளே சரணம்.

# ஸ்ரீ காஞ்சீ நம்பிள்ளை மஹோத்ஸவ ப்ரகடன பத்ரிகை.

(ஆனந்தஸு 1974)

ஸ்ரீ காஞ்சீ தேவப்பெருமாள் ஸந்நிதிவீதியில் திருக்கோயில் கொண்டெழுந்தருளியிருக்கும் நம்பிள்ளைக்கு நாளது கார்த்திகைமீ 5உ (20—11—74) புதன் கிழமை திருவோணத்தன்று திருவவதார மஹோத்ஸவம் தொடக்கமாகி கார்த்திகைமீ 14உ (29—11—74) வெள்ளிக்கிழமை திருக்கார்த்திகைத் திருநக்ஷத்ரத்தில் சாற்றுமுறை யாகும். பத்துநாட்களிலும் அலங்கார திருமஞ்சனமும் இரண்டு வேளைகளிலும் திவ்யப்ரபந்த ஸேவை கோஷ்டிகளும் ததீயாராதனமும் விசேஷ வைபவமாக நடைபெறும். வித்வான்களின் உபந்யாஸங்களும் நடைபெறும். ஆஸ்திகர்கள் அனைவரும் வந்திருந்து அநுபவித்து ஆனந்திக்கவேணும். இம் மஹோத்ஸவ ஸேவார்த்தமாக வெளியூர்களிலிருந்துவரும் பக்த பாகவதோத்தமர்களுக்கு ஸ்தல வசதி முதலிய ஸௌகர்யங்கள் விசேஷமாகச் செய்து கொடுக்கப்படும். ஸ்ரீ வைஷ்ணவபக்த சிகாமணிகள் குழாங்கூடியிருந்து அநுபவிக்கக்கூடிய மஹோத்ஸவமிது.

சாற்றுமுறையன்று ஸ்ரீ யதோக்தகாரி எம்பெருமான் புறப்பாடு கண்டருளி நம்பிள்ளை ஸந்நிதியிலெழுந்தருளியிருந்து ஸேவை சாற்றுமுறைகள் நடைபெறும். அன்று சந்த்ரக்ரஹணமென்று தெரியவருவதனால் தேவப்பெருமாள் ஸந்நிதியின் நடவடிக்கைகளை யநுஸரித்து ஸமயோசிதமாக நடத்தப்பெறும். இரண்டாயிரம் ரூபாய்செலவில்விசேஷ வைபவங்களுடன் நடைபெற்று வருகின்ற இந்தமஹோத்ஸவத்திற்கு பக்தர்கள் உகந்து யதாசக்தி பொருள் உதவி புரிந்து ஆசார்ய ஸார்வபௌமருடைய இந்த மஹோத்ஸவத்தை மிகவும் சிறப்பிக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள்.

இங்ஙனம்,

காஞ்சீபுரம்–3.
10—11—74.

P. B. ANNANGARACHARYA,
Founder, Sri Nampillai Sannidhi.

# நம்பிள்ளை வைபவச் சுருக்கம்

கார்த்திகைத் திங்கள் க்ருத்திகா நக்ஷத்திரத்தில் (திருமங்கையாழ்வாரவதரித்த நன்னாளில்) திருவவதரித்து, திருக்கலிகன்றிதாஸரென்று திருநாமம் பூண்டிருந்து, நஞ்சீயர் பேரருளால் நம்பிள்ளையென வழங்கப்பெற்றவர். பெரிய திருமொழியில் (5-8-7.) *ஓதுவாய்மையுமென்கிற பாட்டின் வியாக்கியானத்திலே பெரியவாச்சான்பிள்ளை யருளிச்செய்துள்ள ஒரு வாக்கியமே போதும் நம்பிள்ளையின் பிரபாவத்தை யறிவதற்கு. அந்த வாக்கியமாவது—

"முற்பட த்வயத்தைக்கேட்டு இதிஹாஸ புராணங்களையுமதிகரித்து, பரபக்ஷப்ரதிக்ஷேபத்துக் குடலாக ந்யாய மீமாம்ஸைகளு மதிகரித்து. போதுபோக்கும் அருளிச்செயலிலேயாம் நம்பிள்ளையைப் போலே..............." என்பது.

# நம்பிள்ளை திவ்யஸூக்திகளிலொன்று

திருவல்லிக்கேணியில் இற்றைக்கும் நடைபெற்றுவரும் வேதவேதாந்தவர்த்தினீ வார்ஷிகோத்ஸவத்தில் (1911 ஆம் வருஷத்தில்) பகவத விஷய பரீக்ஷை கொடுக்க விடைகொண்டிருந்தேன். ஸ்ரீபெரும்பூதூரிலிருந்தும் திருமழிசையிலிருந்தும் திருநாராயணபுரத்திலிருந்தும் பத்தெட்டு வித்யார்த்திகள் பரீக்ஷயர்களாக வந்திருந்தார்கள். அப்போது திருமழிசையில் வித்வத்ஸார்வபௌமராக விளங்கி வந்த உபயவே. திருமழிசை வரதாசார்ய ஸ்வாமியென்று ஜகத்ப்ரஸித்தரான மஹாஸ்வாமி பகவத்விஷய பரீக்ஷகராக எழுந்தருளியிருந்தார்; லேகநபரீக்ஷை முடிந்து வாக்பரீக்ஷை நடக்கிறது. பகவத் விஷய பரீக்ஷை கொடுக்கவந்திருந்த வித்யார்த்திகளை வரிசையாக நிறுத்தி "நம்பிள்ளையின் ஸ்ரீஸூக்தியமுதக்கடலில் ஒவ்வொருவரும் தந்தமக்கு நினைவுக்குவந்த ஒரு விசேஷ ஸ்ரீஸூக்தியைச் சொல்லி விவரிக்கவேண்டியது" என்று கட்டளையிட்டருளினர். அப்படியே ஒவ்வொருவரும் ஒவ்வொரு ஸ்ரீஸூக்தி விசேஷத்தை யெடுத்துரைத்து வருகையில் அடியேன் விஜ்ஞாபித்ததாவது—(திருவாய்மொழி 2—3—11) "குழாங்கொளாயடியீர்! உடன்கூடிநின்றாடுமினே" என்றவிடத்து ஈடுப்பத்தாறாயிரப்படியிலுள்ள ஸ்ரீஸூக்தி—

"அவன் பக்கலிலே நிக்ஷிப்தபரராயிருக்கிற நீங்கள் நாலைந்நாள் இங்கிருக்கும் நாலுநாளும் த்யாஜ்யமான அர்த்தகாமங்களைப்பற்றிச் சிறுபாறு என்னாதே நம் பெரிய குழாத்திலே போய்ப் புகுமளவும் ஒருமிடறாய் அநுபவிக்கப் பாருங்கோள்" என்பது;

இந்த ஸ்ரீஸூக்தியை அடியேன் கண்டபாடம் செய்திருந்தபடியால் இதை ஸதஸ்ஸில், கோயிலில் அரையர் வியாக்கியானம் ஸேவிப்பதுபோல் ஸேவித்துச் சிறிது விவரணமும் விஜ்ஞாபித்தேன். அப்போது அந்த வரதாசார்ய ஸ்வாமி கண்ணீர்ப்பெருக்குடன் ஸாதித்தருளினவார்த்தை அறுபத்துமூன்று வருஷங்களுக்கு மேலாகிலும் இன்று நேற்று கேட்டதுபோலுள்ளது; (அதாவது)—"இந்த ஸ்ரீஸூக்தியை நான் பலகால் ஸேவித்திருக்கிறேன். பலகால் ப்ரவசனமும் செய்திருக்கிறேன். ஆனாலும் நம் அண்ணா இப்போதெடுத்துரைத்தது எனக்கு அபூர்வச்ரவணம் போலுள்ளது. முதன்முதலாக இப்போதுதான் இதைக் கேட்பதாகத் தோன்றுகிறது இந்த ஸ்ரீஸூக்திக்கு, முமுக்ஷுப்படியில் த்வயப்ரகரணத்தின் உபக்ரமத்தில் 'புறம்புண்டான பற்றுக்களை' யித்யாதி பெரிய சூர்ணையில் "இப்படியிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களேற்ற மறிந்து உகந்திருக்கையும்" என்கிற ஸ்ரீஸூக்திக்கும் அதிகாரிகள் எங்கிருக்கிறார்களோ தெரியவில்லை" என்று பெரிய உபந்யாஸமாக ஸாதித்து முடித்தார். அந்த ஸ்வாமி ஸதஸ்ஸைவிட்டுத் திருமாளிகைக்கெழுந்தளும் வரையில் கண்ணீர்ப்பெருக்கு மாறவேயில்லை ... ...

P. B. A.

## அற்புதமான இராமாயண விருந்து

# ந்ருஸிம்ஹப்ரியா நிரீக்ஷணம்
## மதுராந்தக ஸ்வாமி மனனகமலமறுத்தல்

ந்ருஸிம்ஹப்ரியாவின் நிகழும் ஐப்பசிமாத ஸஞ்சிகையை யாத்ருச்சிகமாகக் காணப்பெற்றோம். அதில் "ஆர்ச்சையில் ஊர்த்வபுண்ட்ரம்" என மகுடமிட்டவொரு கட்டுரை ஸ்ரீ. உப. வித்வான். மதுராந்தகம் வீரராகவாசார்ய ஸ்வாமி யெழுதியது காணலாயிற்று. இதன் உபக்ரமத்தில் இந்த ஸ்வாமி யெழுதி யிருப்பதாவது—

"முன்பு இவ்விஷயமான சர்ச்சையை ஸ்ரீவேதாந்த தீபிகையின் பத்ராதிபரான ஸ்ரீ. வி. வி. ஸ்ரீநிவாஸய்யங்கார் ஸ்வாமி (ஹை கோர்ட் ஜட்ஜ்) உத்தாபநம் செய்துள்ளார். அதற்கு அடியேன் 'தேவாலயங்களில் ஊர்த்வபுண்ட்ரம்" என்னும் மகுடத்தின்கீழ் ஸமாதான மெழுதிப் பிரசுரம் செய்துள்ளேன்; தீபிகையில் பிரசுரமாகியுள்ளது அது. அதன் ஸாரமாவது—......" இத்யாதி.

இவ்வளவுக்குத் தெரிவிக்கவேண்டியதை முன்னம் தெரிவித்துவிட்டு மேல் விஷயங்களிற் செல்லுகிறேன். நமது ஸௌஹ்ருந்மணி ஸ்வாமி ப்ரஸ்தாவிக்கும் வேதாந்த தீபிகா பத்ரிகை ஏறக்குறைய நாற்பது வருடங்களுக்கு முன் அஹோபிலமடத்துப் பத்திரிகையாக நடந்துவந்தது. அப்போது அர்ச்சா மூர்த்திகளின் திருமண்காப்பைப் பற்றிய சர்ச்சைகள் அதில் நடந்ததுண்டு. அப்போது நாம் அமருதலஹரீ பத்ரிகையையோ ஸ்ரீ ராமாநுஜனையோ பிரசுரிக்கத் தொடங்கியிருந்ததில்லை. ஸ்ரீ ராமாநுஜ ஸித்தாந்த வைஜயந்தீ என்னும் மாதப் பத்திரிகையை [வைகுண்டவாஸியான வடகரை ராமாநுஜாசாரியரை ஸஹகாரியாகக் கொண்டு] நடத்தி வந்தோம். அதில் "அர்ச்சாவதாரத் திருமண்காப்பு" என்னும் மகுடங் கொண்டதொரு வியாஸத்தை விரிவுக்கு அஞ்சாமல் எழுதி வெளியிட்டிருந்தோம். அது தனிப் புத்தகமாகவும் பதிப்பிக்கப்பெற்று உலகம் பரவியிருந்தது. அதில் சில பகுதிகள் ஸ்ரீ ராமாநுஜனிலும் ஸமீபகாலத்தில் (313ல்) உதாஹரிக்கப்பட்டுள்ளது. [அன்பர்கள் மீண்டுமெடுத்துப் பார்க்கவேணும்.] பிஷ்டபேஷணம் செய்ய விரும்புகின்றிலோம். ப்ரக்ருதம் சுருக்கமாகத் தெரிவிக்கிறோம்.

அர்ச்சாவதார ஊர்த்வபுண்ட்ர விஷயமாக ஸச்சரித்ரரக்ஷையில் ஸ்ரீமந் நிகமாந்த தேசிகன் அருளிச் செய்திருக்கிற திவ்யஸூக்திகளை முக்கியமாகக் காணவேணும். "அர்ச்சா விக்ரஹங்களுக்கு தீபசிகாகாரமான ஊர்த்வபுண்ட்ரமே தேசிகனுடைய காலத்தில் இருந்துவந்ததென்றும் ஹரிபாதாகாரமாய் நாம் தரிப்பதுபோன்ற புண்ட்ரம் பிற்காலத்தில்தான் பகவத் விக்ரஹங்களிலும் வந்து புகுந்ததென்றும் ஒருவாதம் தோன்றிற்று. ஸந்நிதிகளில் மூலபேரம் உத்ஸவபேரம் என்ற இரண்டு திருக்கோலங்கள் ஆழ்வாராசார்யர்களின் அநுபவத்திற்கு விஷய பூதங்கள். உத்ஸவ மூர்த்திகளில் தீபசிகாகாரமான திலகமே எங்கும் அநாதியாகவுள்ளதென்பது ஸர்வஸம்ப்ரதிபந்நம். *கஸ்தூரீ கலிதோர்த்வபுண்ட்ரதிலகம்* என்கிற பட்டர் ஸ்ரீஸூக்திப்படியுள்ள கஸ்தூரித் திருநாமமே தீபசிகாகாரமெனப்படுவதாம். அதனைத் திருவுள்ளம் பற்றியே ஸ்ரீ தேசிகன் "தீபசிகாகாரோர்த்வபுண்ட்ரஸ்ய தர்சநாத்" என்று அருளிச் செய்தார். ஹரிபாதாகாரமான புண்ட்ரத்தை

அணிந்து கொள்ளாமல் தீபசிகாகாரமான புண்ட்ரத்தையே அணிந்துகொள்ளும் இதரமதஸ்தர்கள் நாளைக்கும் இருந்து வருகிறார்கள். அவர்களே தேசிகன் காலத்தில் 'யச்சீலஸ் ஸ்வாமீ தச்சீலோ தாஸ:' என்கிற நியாயத்தை அவஷ்டம்பமாகக் கொண்டு ஆக்ஷேபம் செய்தவர்கள். அன்னவர்களைக் குறித்தே அங்கு தேசிகன் அழகாக ஸமாதானம் அருளிச்செய்துள்ளார்.

(ஸச்சரித்ர ரக்ஷையில்) "லோகே சைதத் ஏவம் த்ரஷ்டவ்யம்" என்கிற வாக்கியத்திற்குமேல் "நச தீபசிகாகாரமேவ" என்று தொடங்கியுள்ள ஸ்ரீஸூக்திகள் எதற்காக அவதரித்தன? என்பதை விமர்சிக்கவேணும். மூல விக்ரஹங்களில் தீபசிகாகாரமன்றிக்கே வேறு ஆகாரமான புண்ட்ரம் காண்கின்றமைபற்றியே அந்த ஸ்ரீஸூக்திகள் அருளிச்செய்யலாயின. அந்தபுண்ட்ரம் தீபசிகாகாரமுமன்று, ஹரிபாதாகாரமுமன்று. பின்னை என்ன ஆகாரமென்னில்; இன்ன ஆகாரமென்று நிர்ணயிக்க நாம் அநதிகாரிகள், ஏதோ அழகிய வடிவமாக எம்பெருமான்களின் திருநெற்றிகளில் காண்கிறது. அந்தத் திருமண்காப்பு அழகுக்காகவே ஏற்பட்டதாகக் கொள்ளத்தக்கது. அதில் எவ்விதமான விரோத சங்கையும் பண்ணத்தகாது—என்கிற இவ்வளவு கருத்தை ஸ்வாமி தேசிகன் அங்கு அந்த ஸ்ரீஸூக்திகளில் ஸ்பஷ்டமாக அமைத்தருளியிருக்கின்றார். "கிம் விருத்யதே" என்று தலைக்கட்டியிருக்கின்றார். மூலத் திருமேனிகளில் சாத்தியுள்ள திருமண்காப்பு நாம் அணியும் திருமண்காப்புபோலவேயிருப்பதனால் அது எங்ஙனே கூடும்? என்று விரோத சங்கை பண்ணினவர்களுக்கு இந்த ஸ்ரீஸூக்தி உத்தரமுரைக்கின்றது. இப்படியன்றி வேறுவகையான அர்த்தம் இங்குத்தோன்ற இடமிருப்பதாக ஸம்ஸ்க்ருத பாஷை பயின்றவர்கள் நினைக்க முடியாது. எல்லா அர்ச்சாமூர்த்திகளிலும் தீபசிகாகாரமான புண்ட்ரமேயிருந்து, வேறுவகையான புண்ட்ரம் இல்லாதிருக்குமாகில் (நச) என்று தொடங்கியுள்ள தேசிக ஸ்ரீ ஸூக்திகளை அப்ரஸக்தங்களாகவும் பொருளற்றனவாகவுமன்றோ பாவிக்கநேரும். நமதுபழையவாதம் இவ்வளவுபோதும்;

ஸஹ்ருதய ஸௌஹ்ருந்மணியான நம் மதுராந்தக ஸ்வாமியின் கட்டுரையில்—

'பகவான் விபவாவதாரத்தில் சாஸ்த்ரவச்யனாய் தன் அனுஷ்டான முகத்தாலே சாஸ்த்ரமர்யாதையை ஸ்தாபனம் செய்தருளுகிறான். ஹரிபாதாக்ருதி ஊர்த்வ புண்ட்ரத்தை ஸ்ரீசக்ரவர்த்தி திருமகன் கண்ணபிரான் முதலிய விபவமூர்த்திகளும் அணிந்துள்ளார்கள் என்றே கொள்ளவேண்டும். அர்ச்சையில் அதே விபவமூர்த்தி ஆவாபனம் பெறுவதனால் பகவத்பாதாக்ருதி புண்ட்ரத்தை ஸமர்ப்பிப்பது உசிதம். ஹரிபாதம் அது என்று கொண்டாலும் குற்றமில்லை'

என்றெழுதியுள்ளார். பெரியாழ்வார் திருமொழியில் (3-4-8) 'சிந்துரப்பொடிக் கொண்டு சென்னியப்பித்திருநாமமிட்டு' என்கிற பாசுரமுள்ளது. ஊர்த்வபுண்ட்ரமணிந்து கொண்டதாக வியாக்கியானமுமுள்ளது. இது கண்ணபிரான் விஷயமான பாசுரம். இங்ஙனே இராமபிரான் விஷயத்தில் பாசுரம் கிடைக்காவிடினும் அப்பிரானுக்கும் இப்படியனுஷ்டானமிருந்ததாகக் கொள்ளலாம். ஸ்ரீராமகிருஷ்ணாதிகள் (விபவத்தில்) தங்கள் திருநெற்றியில் எந்த ஆகாரமுள்ள ஊர்த்வபுண்ட்ரமணிந்து கொண்டிருந்தார்களென்று ஒருசர்ச்சையைக் கிளப்பி நாம் போராடவேண்டாம்,

சக்ரவர்த்திதிருமகனுர் ஆராதித்த திவ்யமங்களவிக்ரஹத்தை நம் மதுராந்தகம் ஸ்வாமி தினப்படியாக ஸேவிக்கப் பரமபாக்யம் பண்ணியிருக்கிறர். பட்டர் ஸ்ரீரங்க கர்ப்பக்ருஹத்தினுள் நுழையும்போதே *ஹேமாம்போஜஜர் நிபிடநிகடே ராம ஸீதோபநீதை: ஸ்ரீரங்கேந்தோ: பதகிஸலயே—வந்தே* என்றருளிச் செய்கிறர். இராமபிரானும் ஸீதாபிராட்டியும் அர்ச்சித்த புஷ்பங்கள் இதோ நாற்புறமும் சிதறிக்கிடக்கின்றனவே! என்கிறர் [பூர்வசதகமுடிவு ச்லோகத்தில்]. உத்தரசதகத்திலும் *மநுகுலமஹீபால...ஸ்வயமத விபோ! ஸ்வேந ஸ்ரீரங்கதாமநி மைதிலீரமண வபுஷா ஸ்வார்ஹாணி ஆராதநாந்யஸி லம்பித:* என்றும், *மந்வந்வவாயே த்ருஹிணே ச தந்யே விபீஷணேநைவ புரஸ்க்ருதேந, குணைர் தரித்ராணமிமம் ஜநம் த்வம் மத்யேஸரித் நாத! ஸநாதயேதா:* என்று மருளிச்செய்கிறர். தொண்டரடிப்பொடியாழ்வார் *இலங்கையர்கோன் வழிபாடு செய்கோயில்* என்றருளிச்செய்ததை விவரித்தருளினபடி யிவ்வளவும்.

இங்ஙனே புராதனமான திவ்யமங்களவிக்ரஹத்தை ஸேவிக்கப்பெற்றும் தெளிவுபெருததென்னே? ஆழ்வார் *ஒன்றுந்தேவிலே "கண்டுந்தெளியகில்லீர்" என்றருளிச்செய்தது நமது ஸஹ்ருந்மணிஸ்வாமியை நோக்கியேயா? ஆம்; என்ன ஸந்தேஹம்? கூரத்தாழ்வான் காலத்திலே சில தௌர்ப்பாக்ய சாலிகள் எம்பெருமானுடைய பரத்வத்திலே அதிசங்கித்தார்கள்; வேதோபநிஷத்துக்களில் விதண்டா வாதம்பண்ணினர்கள். அப்போது கூரத்தாழ்வான் என்ன செய்தருளினர் தெரியுமோ? அவர்களை ஸ்ரீஹஸ்திசைல சிகரத்திலே கொண்டுபோய்த் தேவப்பெருமாளை ஸேவிக்கச் செய்து,

"ஏஷ ஈச இதி நிர்ணயம் த்ரயீ பாகதேயரஹிதேஷு நோ திசேத்,
ஹஸ்திதாமநி ந நிர்ணபேத கோ தேவராஜம அயமீச்வரஸ்த்விதி."

என்ற ச்லோகரத்னத்தை யருளிச்செய்தார். இது கூரத்தாழ்வானுடைய முக்தகமன்று. அவாருளிய பஞ்சஸ்தவங்களுள் ஒன்றுனவரதராஜஸ்தவத்தில் ஆறுவது ச்லோகம். இதன்கருத்து என்னதெரியுமோ? ஸ்ரீமந்நாராயணனே பராத்பரன் என்கிற நிர்ணயம் தௌர்ப்பாக்யசாலிகளுக்கு *உளன் சுடர்மிகு சுருதியுள்* என்று ஆழ்வாரருளிச்செய்தபடி சுருதியிலிருந்து உண்டாகாமற் போனுல் போகட்டும். இதோ ஹஸ்திசைல சிகரத்திலே தேவப்பெருமாளை ஸேவித்தபின்புமா அந்த நிர்ணயம் உண்டாகாமற்போகும்? என்றவாறு. அந்த தௌர்ப்பாக்யசாலிகள் பேரருளாளனை ஸேவித்தவுடனே கர்ப்பதுர்ப்பகத்வம் நீங்கி 'உய்ந்துபோனேன், உஜ்ஜீவிதம்தவ' என்று சொல்லிக்கொண்டே போயினராம். அப்படி இவர்களைச் சிலர் நிர்ப்பந்தித்து உள்ளேயழைத்துப் போகவேண்டா; அநுதினமும் செல்லுகிறர். *பித்தக்நபஞ்ஜந மஹாபுஷி ஜாது நேத்ரே நைவ ப்ரபாபிரபி சங்கலிகத்வபுத்தி:* என்று ஆழ்வான பணித்தபடி நேத்ரதோஷமற்றே, *திவ்யம் ததாமி தே சக்ஷு:* என்று அர்ஜுநனுக்குக் கண்ணபிரானருளியபடி. திவ்யசக்ஷுஸ்ஸைப்பெற்றே *அமரர்க்கரியவாதிப்பிரா வரங்கத்தமலன்முகத்தை ஸேவிக்கட்டுமே, ஸேவித்ததில்லையா? ஸன்னிதிக்குள் செல்லவும் வேண்டா;* ஜிதபாஹ்யஜிநாதி மணிப்ரதிமா அபி வைதிகயந்நிவ ரங்கபுரே, மணிமண்டபவப்ரகணுந் விதகே பரகாலகவி: ப்ரணமேமஹி தாந்* என்று பட்டரருளிச் செய்தபடியே திருமங்கையாழ்வார் திருப்பணியான ப்ராகாரகோபுர

மண்டபாதிகளையாவது கண்குளிரக் காணலாமே. அந்தபட்டருடைய ஸந்ததியாருடையவும், மற்றும் அரங்கன் திருமுன்பே நித்யநைமித்திகபஹுமாந விசேஷங்களை எம்பெருமானார் காலந்தொடங்கியநுபவித்துவரும் ஆசார்யபுருஷர்களினுடையவும் திருமுகமண்டலங்களையாவது திருமாளிகை வாசல்களையாவது ஸேவிக்கலாமே! இவையெல்லாமிருக்கட்டும். இவருடைய திவ்யஸூக்திகளைக் கொண்டே இவரைத் தெளிவிப்போம்.

எழுதுகிறார் மதுராந்தகம் ஸ்வாமி—"வாஸுதேவோபநிஷத்தில் 'பாதத்தோடு கூடிய மூன்று ரேகைகள் புண்ட்ரங்கள். அவை ப்ரணவத்தின் அவயவங்களான மூன்று அக்ஷரங்கள் ...... மூன்று தத்துவங்கள் என்றுபண்டிதர்கள் கொள்ள வேண்டும் என்று உள்ளது" என்று. நம் ஸ்வாமி ப்ராமாணிகவித்வானுகையாலே ப்ரமாணவசனத்தின் பொருளை உள்ளபடி யெடுத்துக் காட்டிவிட்டார். "பாதத்தோடு கூடிய மூன்று ரேகைகள் புண்ட்ரங்கள்" என்பது இவருடைய உபக்ரம வாக்யம்; ஹந்த! ப்ரதமகபளே மக்ஷிகாபாத:! (பாதத்தோடு கூடிய) என்றதற்கு என்ன பொருளென்று பராமர்சித்திலர். *அவஹிதேந மநஸா ஆகர்ண்யதாம் ஸ்வாமிந்! *தென்னாசார்ய ஸம்ப்ரதாயஸ்தர்கள் நாஸிகாமூலத்தில் ஓர் அங்குலப்ரமாணமாக [உத்புல்லபங்கஜவடிவமாக] இடுமதற்குப் பாதமென்று பெயர். இதுஎப்படி பொருந்துமென்றால்; *ந்யக்ரோதோ பஹுபாத் வட:* என்பது அமரகோசம். ஆலமரத்திற்கு பஹுபாத் என்று பெயர். அனேக பாதங்களையுடையது என்பது அதன் பொருள்; இதனால், கீழேபரவுவதற்குப் பாதமென்னும் பெயர் தேறிற்று மேலே இரண்டு கால்களாக இடப்படுவது 'தந்துபந்தே நத்வே சாகே' என்கிற ப்ரமாணவசனத்தின்படி இரண்டு சாகைகளாகும்.

இதற்குமேல் "ப்ருஹத் ப்ரஹ்ம ஸம்ஹிதையில் இதற்கு உபப்ருஹ்ஹணம் செய்கையில்" என்று தொடங்கி ஏதோஎழுதுகிறார் நம் ஸுஹ்ருந்மணி. இங்கு ப்ராஸங்கிகமாக விஜ்ஞாபிக்கிறேன்;— அஹோபில மடாஸ்தானவித்வானென்றிருந்த ஸ்ரீமத் புத்தங்கோட்டம் ஸ்ரீநிவாஸாசார்யஸ்வாமியோடு நமக்குச் சிலவாதவிவாதப் போர்நடந்து செல்லுகையில் ப்ருஹத்ப்ரஹ்மஸம்ஹிதையிலிருந்து சில வசனங்களை நாமஎடுத்துக்காட்டநேர்ந்தது; அப்போது அவர் 'அந்தஸம்ஹிதைபூராவும்கல்பிதம்' என்றெழுதிவைத்திருக்கிறார். அந்தஸம்ஹிதை திருப்பதியில் தெலுங்கு லிபியிலும் பூனா நகரில் தேவநாகரலிபியிலும் பலவாண்டுகட்குமுன் அச்சிடப்பட்டுள்ளது. புத்தங்கோட்டம் வித்வான் கல்பிதமென்று தள்ளினவதனை நமது மதுராந்தகம் வித்வான் ப்ரமாணமாகக் கொள்ளுகிறாரா? என்பது ஜிஜ்ஞாஸை. இந்த ஸம்ஹிதையில் ஏதோ இருப்பதாக இங்கு இவர் எடுத்துக்காட்டுவது நமக்குப்ரதிகூலமென்று கொண்டு இந்த விசாரத்தில் புகுந்தோமல்லோம். இவர் ஒருவசன சகலமும் எதிலிருந்தும் எடுத்துககாட்டவில்லை அதில் அப்படி சொல்லியிருக்கிறது இதில் இப்படி சொல்லியிருககிறது—என்று கடைத்தெருப்புராணம் படிக்கிறாரேயொழிய ஒருமேற்கோளும் எடுத்துககாட்டவில்லை.

"பாதமானது நாஸிகையின் மூலபாகம் தொடங்கி" என்று ஒருவாக்யச்ரேணியை ஆரம்பிக்கிறார். *நாஸிகாமூலமாரப்ய லலாடாந்தம் லிகேந்ம்ருதா* என்கிற ப்ரமாண வசனத்தை யுட்கொண்டு (நாஸிகையின் மூலபாகம் தொடங்கி) என்றெழுதி

கிறுர். இங்கு நாம் திடமாகத் தெரிவிப்பதொன்றே. வாடைக் கையைத் திராமல் இதை இவர் சிக்கனக் கொள்ளவேணும். (டறுகெங்ஏள்ஸ்ட) என்னும் வாசகத்தை விட்டு (நாஸிகா மூலம்) என்னும பேச்சை இவர் கையாண்டாராகில் இவரது கொள்கைக்கு அனர்த்தமேயாகும். [அக்ரம—மத்யம்—மூலம்] என்று மூன்றிடம் அறிவரே இவர். அக்ரபாகம் என்பது எவ்வளவு? மத்யபாகம் என்பது எவ்வளவு? என்றறிந்துகொண்டாராகில் மூலபாகத்தின் அளவை அநாயாஸமாக அறிந்து கொள்வர். "நாஸிகாயாஸ் த்ரியோ பாக: நாஸா மூலம் ப்ரகீர்த்யதே" என்றொரு வசனம்; த்ரிய: என்றதற்கு— த்ருதீய: என்று அர்த்தம் செய்துள்ளார்கள். இந்த வசனமே வேண்டாம். ஒரு வ்ருக்ஷத்தை எடுத்துக் கொள்வோம், ஒரு தண்டத்தைக் கொள்வோம். எதற்கும் அக்ரம் மத்யம் மூலம் என்று மூன்று பாகம் தேறியே தீரும். அந்தந்த வஸ்துவின் அளவுக்குத் தக்கபடி இம்மூன்று பாகங்களின் அளவு எளிதாகத் தெரியும். நம் மதுராந்தகம் ஸ்வாமி தமது நாஸிகையை மூன்று பாகமாக்கி அதில் மூலபாகத்தின் அளவை அவர் தாமே அறுதியிட்டுக்கொள்ளலாம். குறைந்தபக்ஷம் —————— இவ்வளவு நீளம் இவருடைய நாஸிகை யிருப்பதாக வைத்துக்கொள்வோம். இதில் மூன்றிலொரு பாகமான இடத்திலிருந்து ஊர்த்வ புண்ட்ரமணிந்தாக வேண்டுமிவர். அப்படி யணிந்தால் கண்களின் உபரோதம் ஏற்படும். அது நேராதபடி திருமண்காப்பு அணிந்தால் அது நாஸிகாமூலத்தில் தனிப்பட்ட பாதமாக நிற்கும். தென்னுசார்ய ஸம்ப்ரதாயஸ்தர்களின் புண்ட்ர ஸந்நிவேசமாகவே தேறுமென்றபடி.. புருவங்களின் இடைக்குக் கீழே புண்ட்ரஸ்பர்சம் இல்லையாகில் நாஸிகா ஸம்பந்தலேசமு மில்லை யாகும். அந்த ப்ரமாணவசனத்தை இவர் ஸ்மரிப்பதுங் கூடாது.



ஸ்ரீ வைஷ்ணவரல்லாத ப்ராஹ்மணஜாதியில் (ச்வேதம்ருத்திகையினலல்லாமல்) ஊர்த்வபுண்ட்ரமணியும் வகுப்பினர் பலருளர். அன்னவர்களில் நாஸிகா ஸம்பந்தமில்லாமல் புண்ட்ரமணியுமவர்களைத் தேடவேண்டுமென்று (வைகுண்ட வாஸியான) கோஷ்டீபுரம் ஸ்வாமி ஸாதிக்கக் கேட்டிருக்கை.

இதற்குமேல் "பெருமாள் திருமொழி முதற்பாசுரத்தில்..." என்று தொடங்கும் வாக்யச்ரேணியொன்று. அதற்குமேல்—"இதற்கு ஸ்ரீ பெரியவாச்சான்பிள்ளை விவரணமாவது—இரண்டாய்ச் சேர்ந்த திருவடிகளை என்று சொல்லுகிறவற்றை யுடைத்தான பணங்களாயிரம்" என்று—என்பதொரு வாக்கியம். (மதுராந்தக ஸ்வாமி வியாஸத்திலுள்ளது.) இங்குக் கேண்மின். பெருமாள் திருமொழி வியாக்கியான ஸ்ரீஸூக்தியை இன்றுக இவர் எடுத்துக்காட்டவேண்டியதில்லை. நாம் 1917ல் திவ்யப்ரபந்த திவ்யார்த்த தீபிகையுரை எழுதத் தொடங்கினது. நமது பெருமாள் திருமொழி தீபிகையை இவர் தாம் தமது புஸ்தகாலயத்தில் எடுத்துக்காணலாமே. இல்லையேல் ரங்கவிலாஸ் புஸ்தகாபணங்களில் பெற்றுப் பார்க்கலாமே.

## உலகமெல்லாம் இப்படியா ப்ரமிப்பது!

ஸர்ப்பத்தினுடைய படத்தின்மீது புண்ட்ரமா இருக்கிறது? அதுபோன்ற புண்ட்ரம் உலகில யாராவது அணிவதுண்டா? நமஸ்ஹ்ருநமணி அணிந்துகொள்

வதுண்டா? பெருமாள் திருமொழி வியாக்கியான ஸூக்திக்கு அதுவா விஷயம்? இரண்டாய்ச் சேர்ந்த திருவடி நிலையென்று சொல்லலாம்படி காட்சி தருகின்றதா அந்த குண்டலிதாகாரம். அதற்கு ஸ்வஸ்திகமென்றும் ஒரு பெயர். ஸர்ப்பத்தின் நெற்றியை ஊன்றி நோக்கினால் இரண்டாய்ச்சேர்ந்த திருவடி நிலையென்று சொல்லலாம்படியான ரேகை விளங்கக் காணலாம். ஸர்ப்பத்தின்மீது இவர் நினைக்கிற குண்டலிதாகாரமே இங்குவிஷயமாகில் அதேவடிவமான புண்ட்ரத்தை அநாதிகாலமாக அனைவரும் அணிந்துகொண்டு வருவர்களே. ஒருவர்கூட அணியக்காண்கிறிலோமே. இந்த புண்ட்ர விஷயத்தில் இன்னமும் நாம் பன்னிப்பன்னி யெழுதுவது 'ப்ரேத சிரஸி தண்டப்ரஹார:' என்னும்படியாகுமத்தனை. ஸ்வக்ராமவாஸத்தை விட்டு ஸ்ரீரங்கவாஸத்தை ஏற்றுக்கொண்ட நமது நண்பர் எந்தத் திசைமுகம் நோக்கினாலும், ஸ்ரீரங்கநாச்சியார் ஸன்னிதிக்கெதிரே நம் தேசிகன் ஸன்னிதித் திருவாசல் கொடுங்கையை நோக்கினாலும் கண்கொள்ளாக்காட்சியாகக் காட்சிதரும் திருமண்காப்பு ஸந்நிவேசமே ப்ரமாண மூர்த்தந்யமாகக் கொள்ளத்தக்கதென்று தெளிவுகொண்டு ஓய்ந்து நிற்கக்கடவர்.

## புண்ட்ர விசாரத்தில் புனிதமான முடிவு.

1954 ஆம் ஆண்டில் **ராமாநுஜ தயாபாத்ர தனியன் சரித்திரம்** என்கிற நமது நூல் 58 பக்கங்கொண்டது, அதுவே ஸம்ஸ்க்ருதத்தில் மொழி பெயர்க்கப்பட்டு [ராமாநுஜ தயாபாத்ர பத்ய சரித்ரம்] என்னும் பெயரால் 44 பக்கங்கொண்டது — தேவநாகர லிபியில் அச்சிடப்பட்டது வெற்றி பெற்று விளங்குகின்ற திறநைக்கும். இவ்விரண்டுநூல்களும் ஒன்று சேர்த்து பைண்டு செய்யப்பட்டு உலகம் பரவியுள்ளது. ஸ்ரீரங்கத்தில் கீழ உத்தரவீதியில **188A.** ஸ்ரீமதுபயவே வித்வான் திருமலை அனந்தாண் பிள்ளை. ஸதாபிஷேகம் கோவிந்தநரஸிம்ஹாசார்ய ஸ்வாமி திருமாளிகையில் நூற்றுக்கணக்கான பிரதிகள் நிதிநிதாயம் சேமிக்கப்பட்டுள்ளன அபேக்ஷையுள்ளவர்கள் கடாக்ஷிக்கலாம். இவ்விரண்டு நூல்களிலும் பத்துபக்கங்கள் ஸச்சரித்ர ரக்ஷையையடியொற்றி ஊர்த்வபுண்ட்ராகார பேதங்கள் சித்தரித்துக் காட்டப்பட்டுள்ளன. கண்டு தெளியக்கடவர்கள்.

**நம் மதுராந்தகம் ஸ்வாமி யெழுந்தருளியிருக்கும் திருவீதியில் நெ. 35. ஸ்ரீமதுபயவே. திருமஞ்சனம். ஸ்ரீநிவாஸாசார்யஸ்வாமியிடத்திலும் கிடைக்கும்; ரங்கவிலாஸ் Bookseller ப்ரஹ்மஸ்ரீ K. V. T. ராவ் அவர்களிடத்திலும் கிடைக்கும். நமது க்ரந்தமாலா காரியாலயத்திலும் கிடைக்கும்: இந்நூல் வெளிவந்தபிறகு நடந்ததையும தெரிவிக்கிறேன் கேண்மின். அச்சமயம் ஷோளாபூர் லக்ஷ்மீநாராயணமந்திரத்தில் தென்கலைவடகலைவிவாதம் அங்குரிக்கத் தொடங்கிற்று. அங்கிருந்த பண்டிதவாஸுதேவாசாரி முதலான வடகலை மஹந்துக்கள் இந்த நமது நூலைப்பார்வையிட்டு மனம் நொந்து அதற்கு மறுப்பு வெளியிட்டாகவேணு மென்று ஆக்ரஹித்துத் தென்னாட்**

டினர்க்குப் பணயங்காக பரிசளித்து ப்ரபலமாக முயன்றார்கள். காலஞ்சென்ற D. T. தாதாசாரியார் ஸம்ப்ரதாயப்ரதிப மெனஒரு சுவடியை வெளியிட்டார். அதற்கு நம் மதுராந்தகம் ஸ்வாமி அபிநந்தனம் கொடுத்திருக்கிறார். அச்சுவடி ஸம்ப்ரதாயபாஸ்கரம், ப்ரதீப சம்தூஷணிமுதலிய நமது மறுப்பு நூல்களினால் அப்போதே மாண்டொழிந்தது. அந்தச் சுவடியில்தான் 'ஸ்ரீரங்க தேவஸ்தானம் வெகுநாளாய் வடகலையாயிருந்து வந்ததை உடையவரும் கூரத்தாழ்வானும்சேர்ந்து [ச்ராத்த நிமந்த்ரணவியாஜத்தினால் கோயில் திறவு கோல்களைப் பறிமுதல்செய்து] தென்கலையாக்கி விட்டார்கள் என்று கூசாமல் எழுதப்பட்டுள்ளது. இதைநாம் ஒன்றிரண்டல்ல, நூறுநூல்களில் நான்கு பாஷைகளிலும் எடுத்துக் காட்டியிருக்கிறோம். "வ்ருச்சிக தஷ்ட மலிம்லுசநயேந காலம் நயத்யஹோ டீடீ" என்று மெழுதினோம். (அதாவது' தேள்கொட்டின திருடன்போல் காலங்கழிக்கிறார் டீடீ தாதாசாரியர் என்றபடி. திருடன் திருடவந்த இடத்தில் தேள் கொட்டப்பெற்றால் என்ன செய்வன் பாவம்! அழுவனா? கத்துவனா? கதறுவனா? ஒன்றும் செய்யான். பல்லைக் கடித்துக்கொண்டு ஸஹித்திருப்பன். அப்படியே ஸஹித்திருந்து காலங்கழித்தார் அவர்; அவரோடு சேர்ந்து தாளம்போட்ட நமது நண்பர் 'ஏதோ தாக்ஷிண்யத்தினால் அதை அபிநந்திக்தேன், வேறொன்றும் நானறியேன்' என்கிறார். இப்படிகூட டீடீ எழுதியிருப்பரா என்று பலரும் சங்கிக்கக்கூடும். அவர் மறைந்தாலும் அவருடைய ஸம்ப்ரதாய ப்ரதீபச்சுவடி மறையவில்லையே! அதன் ப்ரதிகள் மதுராந்தகம் ஸ்வாமியிடமும் உளவே அவரையே கேட்டுத் தத்துவமுணரலாம். இது மிகமிக முக்கியமான விஷயம்.

ப்ரக்ருதம் தமதுகட்டுரைக்குத் தாமிட்ட சீர்ஷிகைக்கு ஸம்பந்தப்படாத சில விஷயங்களில் வீணாகக் காடுபாய்கிறார். திருவாராதனத்தில் மணியடித்தல்—யஜுர் யாகம்—என்று ஏதோப்ரஸங்கிக்கிறார். முதல்முதலாக நித்யக்ரந்தம் ஸாதித்தவர் எம்பெருமானார். முடிவாக ஸாதித்தவர் மணவாளமாமுனிகள். தேசிகனும பகவதாராதனப்ரயோககாரிகைகள் அருளிச்செய்துள்ளார். இவற்றிலொன்றிலும் கண்டாநாதம் ப்ரஸ்தாவிக்கப்படவில்லை. அஸுரராக்ஷஸ—உச்சாடனத்திற்காக வேண்டியது கண்டாநாதம். நம்மாழ்வார் *பொலிக பொலிகவில் *ஐயமொன்றில்லை அரக்கரசுரர் பிறந்தீருள்ளீரேல் உய்யும்வகையில்லை தொண்டீர்! ஊழிபெயர்த்திடுங் கொன்றே* என்றருளிச் செய்திருப்பதை நிச்சலும் சிந்தித்திருப்பார்க்கு அஸுரராக்ஷஸ பீதி லேசமுமில்லை கிடீர். கண்டாவதாரஸ்வாமியோடு பதினெட்டாவது நூற்றாண்டில் உறவு கொண்டாடப்புகுந்தவர்கள் அந்த ஆசார்யஸார்வபௌமருடைய ஸூக்திகளுக்கு முரணான அர்த்தங்களையும் அனுஷ்டானங்களையுமே கொள்ளக்கடவதாக ஸங்கல்பித்திருக்கையாலே இவர்களுக்கு இதுப்ராப்தமேயாகும். 'கண்டாவதாரரை அடிக்கமாட்டாத குறைதீர கண்டையையடிக்கட்டும்' என்று கோயில் பத்தராவி ஸ்வாமி ஸாதித்துக்கொண்டிருப்பராம்.

யஜ்ஞயாகவிஷயமாகத் தனியே ஒருகட்டுரைகாணக்கடவது. அதன்ஸாரமான உபஸம்ஹாரம்கேளீர். பகவத்கீதையில் "த்ரை குண்யவிஷயா வேதா:" என்றவுடனே "யாவாநர்த்த உதபாநே ஸர்வதஸ் ஸம்ப்லுதோதகே, தாவாந் ஸர்வேஷு வேதேஷு ப்ராஹ்மணஸ்ய விஜாநத:" என்றருளிச் செய்தான் கீதாசார்யன்; இங்கு நம் ஸ்வாமியின் பாஷ்ய ஸ்ரீஸூக்தி "ஸர்வேஷு ச வேதேஷு வைதிகஸ்ய முமுக்ஷோ: யதேவ மோக்ஷஸாதநம் ததேவ உபாதேயம், நாந்யத்" என்பதாம். இங்கு ஸ்வாமி தேசிகன் தாத்பர்யசந்த்ரிகையில்—"**வேதோதிதமபி ந மோக்ஷஸாதந வ்யதிரிக்த முபாதேயம், அநதிக்ருதத்வாத்**" என்றருளிச் செய்திருப்பது கண்ணுடி போல் விளங்காநின்றது. **வேதோதிதமபி நோபாதேயம்** என்று துணிந்து எழுதினவர் வேதத்தைக் காக்கவந்த வேதாந்தவாசிரியர்.

கீதையிலேயே "யத்யதாசரதி ச்ரேஷ்டஸ் தத்ததேவ இதரோ ஜந:, ஸ யத் ப்ரமாணம் குருதே லோகஸ் ததநுவர்த்ததே" என்றவிடத்தில் "**யத் ப்ரமாணம்**" என்று பதச்சேதம் பண்ணியுரைத்த ஆதிசங்கரரைக் கண்டித்து "**யத்ப்ரமாண** மென்று ஸமஸ்த பதமாக்கி "மேலையார் செய்வனகள் **வேண்டுவன** கேட்டியேல்" என்ற ஆண்டாளுடைய திவ்யஸூக்தியை உபப்ரும்ஹித்தருளின திருப்பாவைஜீயர் திருவடிகளைத் தஞ்சமாகக் கொண்டவர்களாய் "ஆசாரியர்கள் அனைவருமுன்னுசரித்த, ஆசாரந்தன்னையறியாதார்—பேசுகின்ற வார்த்தைகளைக் கேட்டு மருளாதே, பூருவர்கள் சீர்த்த நிலைதன்னை நெஞ்சே! சேர்" என்ற உபதேசரத்தினமாலைப் பாசுரத்தை நிச்சலும் அநுஸந்தித்திருக்கும் பரமஸாத்விகர்களன்றோ நாம். நியாஸவிம்சதியில் "ஸித்தம் ஸத்ஸம்ப்ரதாயே ஸ்திரதிய மநகம்" என்று தேசிகனுரைத்தருளின ஆசார்ய லக்ஷணத்திற்கும் "**ஸமுசிதசரித:**" என்று உடனே பணித்த சிஷ்யலக்ஷணத்திற்கும் கொள்கலமாகி நீடூழி வெற்றியுடன் விளங்குமவர்களும் நாமே. ... ...

*வரவரமுனியடி வணங்கும் வேதியர்*
*திருவடியிணைகளென் சிரமேற்சேர்கவே*

## ஸ்ரீ மதுராந்தக ஸ்வாமி ஸன்னிதியில் வேண்டுகோள்

ஸ்வாமிந்! தேவரீர்பக்கலில் ஏகாந்தமாக விஜ்ஞாபிக்க நினைத்ததை உலகமறியவே விஜ்ஞாபிக்கிறேன். ஏறக்குறைய நாற்பதுவருஷங்களுக்கு மேலாக தேவரீருக்கு அடியேன்பால் கள்ளங் கவடற்ற கருணையிருப்பதை அடியேன் நன்கறிந்தவனுதலால் விவக்ஷிதத்தை விஜ்ஞாபிக்கத் துணிவுடையேன். தேவரீர் வெறும் வித்வானல்லீர்; மனமார்ந்த சாஸ்த்ரவிச்வாஸமும் சாஸ்த்ரபீதியுமுடையீர். விவாதாஸ்பதமான விஷயங்களில் தலையிட்டு தேவரீர் எழுதத்தகாது. ஸ்ரீவைஷ்ணவவுலகமோ ஆஸ்திகவுலகமோ விரும்பிவாசிக்கக்கூடிய நல்விஷயங்களில் தேவரீருடைய வித்யாபரிச்ரமத்தைக் காட்டி உலகத்தையெல்லாம் உகப்பிக்க வேணும். விவாதாஸ்பத விஷயங்களை அறவே மறந்துவிடவேணும். 'விவாத விஷயங்களில் உலகுக்குத் தத்துவம் தெரிவதற்காக நான் எழுதவேண்டியதாகிறது' என்னில், என்னுல்வெளிவரும் ஸமாதானங்களுக்கு ஸம்ப்ரதிபந்நமானபதிலை எழுதி ஸ்வாபிப்ராயத்தை நிலைநாட்டிக்கொள்ளவேணும். அல்லது, ஸமாஹிதோஸ்மி என்றுவது தெரிவித்து நிற்கவேணும். ஊர்த்வபுண்ட்ர விஷயத்தில் தேவரீரெழுதுவதையோ அடியேனெழுதுவதையே கண்டு யாரும் தம்தமது புண்ட்ரத்தை மாற்றிக்கொள்ளப் போகிறதில்லை. ஆனாலும் விவர்தத்தில் தலையிட்டால் ஒரு முடிவு காணப்பெறவேணும். ஸ்ரீமத்ரஹஸ்யத்ரய ஸாரத்தில் "த்ராணே ஸ்வாமித்வ மௌசித்யம் ந்யாஸாதயாஸ் ஸஹகாரிண:, ப்ரதாநஹேதுஸ் ஸ்வாதந்த்ர்ய விசிஷ்டா கருணு விபோ:" என்று ஸ்வாமி தேசிகன் ஸாதித்தருளின காரிகையின் பரமார்த்தத்தைப் பரிசீலித்து ஸ்ரீவைஷ்ணவவுலகம் தெளிய ஒரு வியாஸமெழுதியருளினுல் உண்மையில் இதனில்மிக்க மஹோபகாரம் வேறு இராது. ... ...

# தமிழ்மொழிக்கே உரிய இரண்டு மரியாதைகள்.

உலகில் நடையாடும் ஒவ்வொரு பாஷைக்கும் அஸாதாரணமான சில மரியாதைகள் உண்டு. அங்ஙனே தமிழ்மொழிக்குப் பல மரியாதைகளுண்டு. பிரகிருதம் இரண்டு மரியாதைகளைமட்டும் ஈண்டெடுத்து நிரூபிக்கிறோம்.

1. ஆனை, கடல், பொழில், பொய்கை, அரவம் முதலிய பலவற்றைக் கூறுமிடங்களில் பெரும்பாலும் அடைமொழியிட்டுக் கூறுவர். அவ்வடைமொழிகள் பெரும்பாலும் சாதியியல்பு பற்றியவையாயிருக்கும். இதற்குச் சில வுதாரணங்கள் காட்டுவோம். நம்மவர்களறிந்த திவ்வியப் பிரபந்தங்களிலேயே காட்டுவோம். [ஆனை.] ஆழ்வார்கள் ஆனைகாத்த கதையையும் ஆனை கொன்ற கதையையும் அருளிச்செய்கிறார்கள். "ஒருவாரணம் பணிகொண்டவன் பொய்கையில் கஞ்சன்றன் ஒருவாரண முயிருண்டவன்" (பெரியாழ்வார்) என்று அடைமொழி யிடாமலே கூறினவிடமுமுண்டு. +ஆனை காத்தோரானை கொன்று+ +ஆனைக்கு நீ யருள் செய்தமையால்* என்றிங்ஙனே பலபலவிடங்கள் காணலாம். + மதமொழுகுவாரண முய்யவளித்த, * ஓடைமாமதயானை யுதைத்தவன் * (நாச்சியார்), * கொலையார் வேழம்* தூம்புடைப்பனைக்கைவேழம்* *கவளமாகதத்தகரி* +கவளமால் யானை*- இங்குள்ள அடைமொழிகள் சாதியியல்புபற்றியவை. பூதத்தாழ்வார் *தொடரெடுத்தமால்யானை சூழ்கயம்புக்கஞ்சி+ என்கிறார், இதிலும் (தொடரெடுத்த) என்னு மடைமொழி சாதியியல்புபற்றியதே. [கடல்] கடலைக் கூறவேண்டுமிடங்களில் +வங்கக் கடல், வங்கமாமுந்நீர், எறிகடல், அலைகடல், கரைசெய்மாக்கடல், மாலுங்கருங்கடல், மைந்நின்றகருங்கடல், மையொண்கருங்கடல்* இத்யாதி. [பொழில்] *நாறுநறும் பொழில்* +பூம்பொழில்* [பொய்கை.] *இலையார் மலர்ப்பூம் பொய்கை, *தடம் பெரும் பொய்கை, பூம்புனல் பொய்கை* இத்யாதி. [அரவம்] *கோளரவம், வாளரவம், நீளரவம், வரியரவம், வரிநிறப் பெரியவாளரவு, கவைநாவரவு, விடமுடையரவு, படமுடையரவு, வரிவாளரவு, .......... இங்ஙனே சொல்லி வருமடைவில் *துத்திசேர்நாகம்· (பூதத்தாழ்வார்) என்றார். திருமங்கையாழ்வார் பெரிய திருமடல் தொடக்கத்தில் +பல்பொறிசேராயிரவாய் வாளரவு * என்றார். *துத்திசேர்நாகமென்றதும் +பல்பொறிசேர்...அரவு என்றதும் பரியாயமே. அரவின் படத்தில் இயற்கையான புள்ளிகளுண்டு. (மான்களுக்குப்போல.) அந்தப் புள்ளிகளுக்கே துத்தி யென்றும் பொறி யென்றும் பெயர். +ஓடைமாமதயானை* என்ற நாச்சியார் திருமொழியில் ஓடை என்றது— சாதியியல்பு பற்றியதே. இதனை யறியாதார் சிலர் *ஓடமாமதயானை+ என்று பாடஞ்செய்வதும் குவலயாபீட யானை ஓட, அதை யுதைத்தவன் என்று பொருள் கூறுவதும் வேடிக்கை.

முதலில் இரண்டு மரியாதைகளென்றதில் ஒன்றை விவரித்தோம்; மற்றொன்று கேளீர்.

2. இதிஹாஸ புராணங்களில் வழங்கும் பல வ்யக்திகளை ஸம்ஸ்க்ருத கவிகள் கூறுமிடத்துப் பெயரைச் சொல்லியே கூறுவர்கள். தமிழில் அந்த நியமம் கொள்ளவில்லை. சிலவிடங்களில் மட்டுமே பெயரை வியக்தமாகக் கூறுவர்; பல விடங்களில் சந்தர்ப்பம் நோக்கி ஊஹித்தறியவேண்டும்படி கூறுவர்கள். த்ரௌபதியை யெடுத்துக் கொள்வோம். [* பந்தார் விரலாள் பாஞ்சாலி கூந்தல் முடிக்க*] [பாண்டவர் தம்முடைய பாஞ்சாலி மறுக்கமெல்லாம்]-இங்குப் பாஞ்சாலி யென்று வியக்தமாக வுள்ளது; * அணியிழையைச் சென்று—சந்தமல் குழலாள் * ....இவ்விடங்களில் சந்தர்ப்பம் நோக்கி த்ரௌபதி யென்றறிந்து கொள்ள வேணும். பூமிப் பிராட்டியை யெடுத்துக் கொள்வோம்; * துவரிக்கனிவாய் நிலமங்கை துயர்தீர்ந்துய்ய*-இங்கே வியக்தமாகச் சொல்லியுள்ளது. * புலமன்னு வடம்புனை கொங்கையினாள் பொறைதீர* = இங்கு ஊஹிக்கவேணும். சீதா பிராட்டியை யெடுத்துக் கொள்வோம்; * பந்தணைந்த மெல்விரலாள் சீதைக்காகி* *மைதிலியை மணம் புணர்வான் * வைதேவி விண்ணப்பம் * = இவ்விடங்களில் வியக்தமாகச் சொல்லியுள்ளது. * நெறிந்த கருங்குழல் மடவாய்! * அல்லியம் பூ மலர்க்கோதாய்! +... இங்ஙனே பலவிடங்களில் ஊஹித்தறியவேணும். நப்பின்னைப் பிராட்டியை யெடுத்துக் கொள்வோம்; + காம்பனை தோள் பின்னைக்கா + பின்னைக்கா யேற்றுயிரையட்டான் * பின்னைதோள் மணந்த பேராயா! + தோளிசேர்பின்னை பொருட்டு * நப்பின்னை காணில் சிரிக்கும் + பிறையுடைவாணுதல் பின்னை திறத்து = இங்ஙனே பலவிடங்களில் வியக்தமாகக் கூறியுள்ளது. + கோவைவாயாள் பொருட்டு + பந்திருக்கு மெல்விரலாள் பாவை தன் காரணத்தால் + மின்னினன்ன நுண்மருங்குல் வேயேய்தடந்தோள் மெல்லியற்கா + அன்றுருமேழுந்தழுவி நீ கொண்ட ஆய்மகள், அடலாயர் தங் கொம்பினுக்கு. + வம்பவிழ் கோதை பொருட்டா + = இங்ஙனே பல நூறிடங்களில் ஊஹித்தேயறியவேண்டும். + வம்பவிழ் கோதை யென்னுமிவ்விடத்தை நமது நண்பர் ஸ்ரீமதுராந்தகம் ஸ்வாமிக்குப் பன்முறையும் விளக்கியும் பயன்படவில்லையந்தோ! ... .... ... ... *

---

# சென்னையில் உபயவேதாந்தாசார்ய பீட பரிஷத்தின் நிகழ்ச்சி.

பத்ராதிபர்: P. B. A.

சென்ற மாதத்து ஸ்ரீராமாநுஜனிதழில் நாம் வெளியிட்டிருந்தபடி, உலகம் நிறைந்த புகழாளரான ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி ஸ்ரீமந்நாராயண ராமாநுஜ ஜீயர் ஸ்வாமிகள் (அக்டோபர்மீ) 22, 23, 24 தேதிகளில் சென்னைமாநகரில் நடத்த ஸங்கல்பித்திருந்த உபயவேதாந்தாசார்யபீட வித்வத்பரிஷத்தானது மிகச் சிறந்த முறையில் நடந்தேறியது. தென்னாட்டிலிருந்தும் ஆந்திர தேசத்திலிருந்தும் திருநாராயணபுர ப்ராந்தத்திலிருந்தும் உபயவேதாந்த பரிச்ராந்தர்களான பல வித்வான்கள் வந்திருந்து மூன்றுநாளும் உபயவேதாந்தங்களிலும் ப்ரவசனம் செய்து ஸம்பாவிக்கவும் பெற்றார்கள். சென்னைவாஸிகளான வித்

வான்களும் கலந்து கொண்டு ஸபையை ரஞ்ஜிப்பித்தார்கள். அடியேன் இடையில் ஒருநாள் மட்டும் அங்கு விடை கொண்டிருந்து (23—10—74 பிற்பகலில்) "உபய வேதாந்த ஸமந்வயம்" என்னும் தலைப்பில் விஜ்ஞாபித்தேன். அவ்வுபந்யாஸத்தின் ஸம்க்ஷேபம் மேலே வெளிவரும். உபக்ரமத்தில், இந்தப் பரிஷத்துக்கு அத்யக்ஷராயெழுந்தருளியிருந்த ஸ்ரீமந்நாராயண ராமாநுஜ ஜீயர் ஸ்வாமிகளின் பெருமையைப் பேசும் சித்ரகவித்வரூபமான இரண்டு ச்லோகங்களை விண்ணப்பஞ் செய்து விளக்கமும் தந்தேன். அன்றைய வருஷமாஸத் தேதிகளின் குறிப்பு 23—10—1974 என்பதாகவன்றோ இருந்தது. இந்த லக்கங்களை முறைப்படியிட்டு முத்ராலங்கார ரீதியில் ஜீயர் ஸ்வாமியைப் புகழ்ந்ததாகையாலே சித்ர கவித்வ மென்னலாயிற்று. அவ்விரண்டு சுலோகங்களையும் இங்கு முறையே வெளியிட்டுச் சுருக்கமான விவரணமுஞ் செய்கின்றேன்.

> ஸோऽயம் யோऽஸ்மிந் க்ருதாதியுகதர்மாணாம் சதுர்ணாம் நிதி:
> ஸ்ரீபாஷ்யோதிதஸப்தஸாதநவரை: பூர்ணோ விவேகாதிபி: ।
> ப்ரஜ்ஞோந்மேஷவிஜ்ரும்பணைர் நவநவை: [illegible]
> [illegible] ॥

(சுருக்கமான உரை) 1974 என்பதன்றோ நிகழும் வருடம். இதிலுள்ள நான்கு லக்கங்களை வ்யுத்க்ரமேண இட்டு மூன்று பாதங்கள் அமைக்கப்பட்டன. [க்ருதாதியுகதர்மாணும் சதுர்ணும் நிதி:] *த்யாயந் க்ருதே யஜந் யஜ்ஞைஸ் த்ரேதாயாம், த்வாபரே அர்ச்சயந், யதாப்நோதி ததாப்நோதி கலௌ ஸங்கீர்த்ய கேசவம்.* என்கிறபடியே நான்கு யுகங்களின் தருமமான தியாநம் யஜநம் அர்ச்சனம் நாமஸங்கீர்த்தனம் என்கிற நான்கிலும் நம் ஸ்வாமி நிஷ்டையுடையவரென்றபடி. இதற்குப் பிறகு 7 லக்கம் வரவேணும். [ஸ்ரீபாஷ்யோதித ஸப்தஸாதந வரை: பூர்ணே விவேகாதிபி:] பக்தி ஸாதனங்களாக விவேகாதிகள் ஏழு ஸ்ரீபாஷ்யத்தில் கூறப்பட்டுள்ளன. விவேக விமோக அப்யாஸ க்ரியா கல்யாண அநவஸாத அநுத்தர்ஷங்கள் என்பவை அவை. இவற்றுள் விவேகமாவது ஜாதி துஷ்டமுமாச்ரயதுஷ்டமும் நிமித்த துஷ்டமுமல்லாத அன்னத்தினுல் காய சுத்தி பெறுதல். விமோகமாவது காமக்ரோதங்களில் ஒட்டற்றிருக்கை. அப்யாஸமாவது—* சங்கினோடும் நேமியோடும் தாமரைக் கண்களோடும் செங்கனிவாயொன்றினோடும் செல்கின்ற தென்னெஞ்சமே** *மின்னுநூலுங்குண்டலமும் மார்வில் திருமறுவும், மன்னுபூணும் நான்கு தோளும் வந்தெங்கும் நின்றிடுமே* என்றாற் போன்ற அநுஸந்தானம் மிக்கிருக்கை. க்ரியையாவது – ஸ்வரூபாநுரூபமான நித்யநைமித்திக கருமங்களை யதாசக்தி அனுஷ்டிக்கை. கல்யாணமாவது—ஸத்ய ஆர்ஜவ தயா தாந அஹிம்ஸா அநபித்யைகளாகிற ஆறுக்கும் கல்யாண மென்று பெயர். அநவ்ஸாத அநுத்தர்ஷங்களாவன – *முனியார் துயரங்கள் முந்திலும், இன்பங்கள் மொய்த்திடினும் கனியார் மனம் – எங்களி ராமானுசனை வந்தெய்தினர்* என்கிறபடியே கேத மோதங்களில் சித்தவிகாரமடையாதிருக்கை. ஆக, விவேகாதி ஸப்தகத்தினுல் நிறைந்தவர் நம் ஜீயர்ஸ்வாமி. இதற்குமேல் 9 லக்கம் வரவேணும். ப்ரஜ்ஞோந் மேஷ விஜ்ரும்பணைர் நவநவை:]

*ஸ்ம்ருதிர் வ்யதீதவிஷயா மதிராகாமி கோசரா, புத்திஸ் தாத்காலிகீ ப்ரோக்தா ப்ரஜ்ஞா த்ரைகாலிகீ மதா* என்கிற வசனத்தினுல் ப்ரஜ்ஞையின்படியை யறிவது. நம் ஜீயர் ஸ்வாமியின் திருவுள்ளத்தில் க்ஷணே க்ஷணே புதிது புதிதாகத் தோன்றுகிற ப்ரஜ்ஞோந் மேஷங்களை நாற்றிசையும் பரந்த அவரது நடத்தைகளினுல் உலகமுழுது முணர்ந்திருக்கின்றது. இங்கு (நவ:வை:) என்ற சப்தசக்தியினுல் 9.லக்க முணர்த்தப்படும். இதற்குமேல் (ஒன்று) என்கிற லக்கம் வரவேணும். [புவி அத்விதீயப்ரத:] நிலவுலகில் நிகரற்ற புகழுடையவர். (அத்விதீய) என்பதனுல் 1 லக்கம் ஸூசிதம்.

இதற்குமேல் மாதம் பத்தாவதாகையால் 10 என்கிற லக்கம் வரவேணும். [துங்கோச்ச்ராயதசாஞ்சித:] மேன்மேலும் ஓங்கி வளர்கின்ற உயர்ந்த தசையிலுள்ளவர் ஸ்வாமி. [தசா] ஜாதகரீதியில் காணும் தசை இங்கும் சப்த சக்தியினுல் 10 லக்கம் தெரிவிக்கப்பட்டது [த்ரிதநுபாக்.] மூன்று திருமேனிகளையடைந்திருப்பவரென்கை. பட்டர் ஸ்ரீரங்கராஜ ஸ்தவத்தில் ஸ்ரீரங்கவாஸிகளை மூன்று திருமேனிகளையுடையவர்களாக அருளிச்செய்கிருர். மநுஷ்ய திர்யக் ஸ்தாவர சரீரங்களாக நமது கண்ணுக்குப் புலப்பட்டாலும் உண்மை அங்ஙனல்ல. *அஹ்ருத ஸஹஜ தாஸ்யாஸ் ஸூரயஸ் ஸ்ரஸ்த பந்தா:; விமல சரமதேஹா: இத்யமீ ரங்கதாம, மஹித மநுஜதிர்யக்ஸ்தாவரத்வா: ச்ரயந்தே ஸூநியதமிதி ஹஸ்மப்ராஹுரேப்யோ நமஸ் ஸ்தாத்.* என்பது பட்டருடைய ஸ்ரீஸூக்திரத்னம். *விண்ணாட்டவர் மூதுவரெனப்படுகிற அனந்த கருட விஷ்வக்ஸேநாதிகளான நித்ய ஸூரிகளிலொருவரோ! *கரைகண்டோர் என்னப்படுகின்ற முக்தர்களில் ஒருவரோ! *விண்ணுளாரிலும் சீரியரெனப்படுகிற விலக்ஷணமுமுக்ஷுக்களில் தலைவரோ! என்று சங்கிக்க வேண்டாதபடி முப்புரியூட்டின திருவுருவம் படைத்தவரென்கை. இதற்குமேல் (2) லக்கம் வரவேணும். [த்வந்த்வாதிகோத்யோத்தே.] பகவத் கீதையில் *த்வந்த்வைர் விமுக்தா:* என்றும்,* த்வந்த்வாதீதோ விமத்ஸர: *என்றும் சொல்லுகிறபடியே இரட்டைகளான காமக்ரோதங்கள் ஸுக துக்கங்கள் முதலானவையில்லாதவரென்கை.

—இனி இரண்டாவது சுலோகம் வருமாறு—

[illegible]
[illegible]
[illegible]
[illegible]

இந்தச்லோகம் லக்கங்களை வ்யுத்க்ரமமாகவன்றிக்கே நேராகவே இட்டு ஸ்வாமியின் பெருமையைக் கூறுவதாம். தேதி 23. மாதம் 10. வருடம் 1974. இந்த அடைவிலேயே விவரணம் காண்மின். [23. த்வாப்யாம் உஜ்ஜித:. த்ரிபி: உஜ்ஜித:] *முக்குணத்திரண்டவையகற்றி* என்கிற திருவெழுகூற்றிருக்கையின்படியே ராஜஸதமோ குணங்களை யகற்றினவர். நிஸ்த்ரைகுண்யோ பவார்ஜுந* என்கிற படியே ரஜஸ்தமோமிச்ரமான ஸத்வமுமற்றவர்; சுத்தஸாத்விகர், பரமஸத்வ

ஸமாச்ரய ரென்றபடி. இனி மாதலக்கம் 10 வரவேணும். [தசம இத்யுக்திக்ஷமோ யோகிராட்.] நம்முடைய ஸம்ப்ரதாயத்தில் குருபரம்பரையில் ஒன்பது ஜீயர்களே யுள்ளார்கள்; இந்த ஸ்வாமி பத்தாவது ஜீயரென்று பரிகணிக்கத்தகுத்தவர். குரு பரம்பரையில் திகழும் ஜீயர்கள் ஒன்பதின்மராவார்—

1. ஆளவந்தார். 2. எம்பெருமானார். 3 எம்பார். 4. நஞ்சீயர். 5. வாதி கேஸரி அழகிய மணவாளச்சீயர் 6. மணவாளமாமுனிகள். (7, 8, 9.) மாமுனி கள் நியமித்தருளின அஷ்டதிக்கஜாசாரியர்களில் யதிகள் மூவர் — வானமாமலை ஜீயர், திருவேங்கட ராமாநுஜஜீயர், பட்டர்பிரான் ஜீயர். (10. ஸ்ரீமந்நாராயண ராமாநுஜ ஜீயர்.) இனி வருஷலக்கத்தில் 1 9, 7, 4 லக்கங்கள் வரவேணும்.

[1. ஏகாகீ ப்ரதித:] பத்தாவது ஜீயரா யிருந்தாலும் இப்போது *ஏகோ ஹ வை நாராயண: அஸ்தி* [9. நவேஷி கதிதே நைவ்வதி வாச்ய: க்ஷிதௌ*] இவரைப் போன்றவர் வேறொருவர் [ந வா?] இல்லையா? என்றால் இல்லையென்றே சொல்லத்தக்கவர். [ஸப்தார்ச்சிஸ்ஸம ஸப்தஸப்திஸந்ருச:] விசேஷணோபயபத கர்மதாரய ஸமாஸம்காண்க. அக்நிபோலவும் ஆதித்யன் போலவும் ஜ்வலிப்பவ ரென்கை. [4. சதுர்ணாம் பயோராசீநாம் மத்யே அதிமாநுஷக்ரிய இதி ச்லாக்யஸ் ஸமிந்தாம் புவி.] இம்மண்ணுலகில் நான்கு ஸமுத்ரங்களினிடையில் அதிமாநுஷ கார்யங்களைச்செய்து போருமவர் என்று புகழத்தக்கவராய் நம் ஜீயர்ஸ்வாமி நீடுழி வாழ்கவென்கை. ... ... ... ....

ஸ்ரீ:

# உபயவேதாந்த ஸமந்வயம்.

(ஸ்ரீமத் பரமஹம்ஸ த்ரிதண்டி ஸ்ரீமந் நாராயண ராமாநுஜ ஜீயர் ஸ்வாமிகள் சென்னையில் நடத்தின உபயவேதாந்தாசார்யபீட பரிஷத்தில் 23-10-74 அன்று பிற்பகலில் அடியேன் உபந்யஸித்தது.)

*ஶரீவெ-ஶய திவ ஶிவாவா ந-நிவாதாஂலோஜ அணலீகொடய்ழ ।*
*ஸ்ரீஹாஷ்ராதீஹாய- ஞூவ ஆந-வா க: ஞூஹாஷ-ய சந்வீராநு ॥*

ஸ்வாமியருளிச் செய்த ஸ்ரீ பாஷ்யத்தின் தொடக்கத்தில் பதினைந்து எழுத்துக்களையும், முடிவில் பதினாறு எழுத்துக்களையுங் கொண்டு அவற்றை விவரிக்கும் முகத்தால் உபயவேதாந்தார்த்த ரஹஸ்யத்தை விளக்குதல் இப் போதைய நமது உபந்யாஸத்தின் விஷயம். ஸ்ரீ பாஷ்யத் தொடக்கத்தில் மங்கள ச்லோகத்திலுள்ள * அகிலபுவநஜந்ம ஸ்தேம பங்காதிலீலே * என்கிற பதினைந் தெழுத்துக்களாம். முடிவில் பதினாறெழுத்துக்களாவன * வாஸுதேவஸ் ஸர்வமிதி ஸ மஹாத்மா ஸுதுர்லப: * என்று ஸ்வாமி யுதாஹரித்த கீதாவசனத்திலுள்ளவை. ஆக, உபக்ரமத்தில் ஒரு பாதத்தி லும், உபஸம்ஹாரத்தில் இரண்டு பாதங்களிலும் அமைந்துள்ள அர்த்த

தத்துவத்தை ஈண்டு விவரிக்கிறேன். * அகிலபுவநஜந்மேத்யாதியான மங்கள ச்லோகமானது எம்பெருமான் விஷயத்தில் தமக்கு பக்தியுண்டாகவேணுமென்று ப்ரார்த்திப்பது போலவே நம்மாழ்வார் விஷயத்திலும் பக்தியை ப்ரார்த்திப்பதாம்— என்று சிறந்த உபபத்திகளுடன் மேலையார் நிர்வஹித்தருளும் வழியுள்ளது. அதில் முதற்பாதத்தைமட்டும் இப்போது எடுத்துக் கொள்வோம். அகிலபுவனங் களினுடையவும் ஸ்ருஷ்டி ரக்ஷண ஸம்ஹாராதிகளை எம்பெருமான் லீலையாக வுடையவன் என்கிற பொருள் அனைவருமறிந்ததே. நம்மாழ்வார் பரமான பொருளில். அகிலபதம் புவந விசேஷணமன்று; "புவநபங்கஸ்தேமபங்காதிலீல: (ஸர்வேச்வர:) அகிலம் யஸ்ய" என்று பஹுவ்ரீஹிஸமாஸம் கொள்ளக் கடவது. தாரகபோஷக போக்யாதிகளான எல்லாமும் யாவரொருவர்க்கு எம்பெரு மானேயோ, அவர் அகிலபுவநஜந்மஸ்தேமபங்காதி லீலர்—என்றபடி. வ்யாஸ பராசராதி மஹர்ஷிகள் * காயோடு நீடுகனியுண்டுவீசுகடுங்கால் நுகர்ந்து * என்கிறபடியே வாதாம்புபர்ணசநர்களா யிருந்தவர்கள். ஆழ்வாரொருவரே * உண்ணுஞ்சோறு பருகுநீர்த்தின்னும் வெற்றிலையுமெல்லாங்கண்ணனெம் பெருமானென்றே யிருந்தவர் என்பது அவர்தம்முடைய திருவாக்கால் தேறின தாம. ' அவர்களுக்குக்காயோடென்னுமிவையே தாரகாதிகள்; இவர்க்கு எல்லாங்கண்ணனிறே" என்கிற ஆசார்யஹ்ருதய சூர்ணையுங் காண்க. ஆக, * அகிலபுவந ஜந்மஸ்தேமபங்காதி லீலே * என்கிற ஸ்ரீ பாஷ்யோபக்ரம ஸ்ரீ ஸூக்தியினால் த்ராவிட வேதாந்த ப்ரவர்த்தகரான ஆழ்வாருடைய சிந்தனை செய்யப்பட்டதாயிற்றென்பது விளங்கிற்று.

இனி ஸ்ரீபாஷ்யத்தின் உபஸம்ஹாரத்திற்குச் செல்வோம். * வாஸுதேவஸ் ஸர்வமிதி ஸ மஹாத்மா ஸுதுர்லப: * என்பதன்றோ உபஸம்ஹார ஸூக்தி. இதனால், கீழே விவரிக்கப்பட்ட (அகிலபுவநஜந்மேத்யாதி பாதத்தின்) பொருள் நினைவூட்டப்பட்டு நிலைநாட்டப்படுகிறது. சாரீரகமீமாம்ஸையின் சரம ஸூத்ரம் * அநாவ்ருத்திச் சப்தாத் * என்பது எதற்காக அவதரித்தது? அந்த ஸூத்ரத்தின் விவரணத்தில் *வாஸுதேவஸ் ஸர்வமிதி ஸ மஹாத்மா ஸுதுர்லப:* என்கிற கீதாவசனத்தின் உதாஹரணத்திற்கு என்ன ப்ரஸக்தி? என்று விமர்சிக்க வேணும். *அநாவ்ருத்தி ஸூத்ரத்தின் ப்ரமேய மென்ன வென்றால்—முக்தாத்மா வுக்கு மீட்சியுண்டா? இல்லையா? என்று சங்கித்து. * ந ச புநராவர்த்ததே * இத்யாதி சாஸ்த்ரத்தினால் மீட்சியில்லை யென்று தெரிகிறது — என்று முடிப்பதே யாம். இவ்வளவுதான் இதற்கு உரையிடவேண்டிய விஷயம். இதை அழகாக ஸ்வாமி உரையிட்டருளியாயிற்று. இதர பாஷ்யகாரர்களும் இவ்வளவே உரை யிட்டுள்ளார்கள். ஸ்ரீபாஷ்யத்தில் * ததா ச பகவதா ஸ்வயமேவோக்தம் ... மாமு பேத்ய து கௌந்தேய! புநர் ஜந்ம ந வித்யதே * இதி – என்னுமளவால் ஸூத்ர விவரணம் முடிக்கப்பட்டாயிற்று. அதற்குமேல் * ந ச உச்சிந்ந கர்மபந்தஸ்ய * என்று தொடங்கியுள்ள ஒரு வாக்ய ச்ரேணியும், * ந ச பரமபுருஷஸ் ஸத்யஸங் கல்ப: .... * என்று தொடங்கியுள்ள ஒரு வாக்யச்ரேணியும் அவதரித்திருப்பதற்கு ஸூத்ரத்தோடு என்ன தொடர்பு உள்ளதென்று பார்க்கவேணும். ஸ்ரீபாஷ்ய மருளிச்செய்யத் தொடங்கும்போது "ஸூத்ராக்ஷராணி வ்யாக்க்யாஸ்யந்தே"

என்று ப்ரதிஜ்ஞை செய்தருளின ஸ்வாமி ஸூத்ரத்தோடு ஸம்பந்தப்படாதவற்றை ஏதுக்கு ஸாதித்தருளினர்? என்று ப்ராமாணிகர்கள் விமர்சிக்க வேண்டாவா?

இங்குக் கேண்மின்; மீட்சியில்லை யென்று தெரிவிக்கிற சாஸ்த்ரம் கிடக் கட்டும்; எம்பெருமானே கேட்பாரற்ற ஸ்வதந்திரன். அந்த நிரங்குசஸ்வாதந்திரி யத்தை * நாஸௌ புருஷகாரேண நசாபி அந்யேந ஹேதுநா, கேவலம் ஸ்வேச்சயைவாஹம் ப்ரேக்ஷே கஞ்சித் கதாசந *இத்யாதிகளான ஸ்வோக்தி களால் வெட்டவெளிச்சமாக்கியுமிருக்கின்றான். அன்னவன் தன்னருகே வந்த முக்தாத்மாவை நோக்கி 'அப்பா! மீண்டுபோ' என்று சொல்லித் திருப்பிவிட்டால் யாரேனும் தடை செய்யவல்லாருளரோ? முக்தாத்மாவும் "ஏதோ ஆசைப்பட்டு வந்தோம்; ஊரைப் பார்த்தோம்; உம்பர் கோமானையும் ஸேவித்தோம்; ஸூரிகளையுங் கண்டுகளித்தோம்; இனி நம்மூருக்குச் சென்று சேர்வோம்" என்றெண்ணித் திரும்பிவிட நினைத்தானாகில் அவனைத்தான் தடுப்பா ருண்டோ? முக்தாத்மாவுக்கு இப்படிப்பட்ட எண்ணம் தோன்றாதென்றே வைத் துக்கொள்வோம். ஸ்வதந்த்ரனான எம்பெருமான் திருப்பியனுப்பவல்லவன்தானே என்றால், அல்லன் என்று யாராலும் சொல்ல இயலாது. இதற்கு விடை கூற வேணுமானால், த்ராவிட வேதஸாகரத்தில் ஆழ மூழ்கினவர்களுக்கல்லது மற்றை யோர்க்கு ஸாத்யமாகாது.



*ந ச பரமபுருஷஸ் ஸத்ய ஸங்கல்ப: அத்யர்த்த ப்ரியம் ஜ்ஞாநிநம் லப்த்வா கதாசித் ஆவர்த்தயிஷ்யதி"* என்கிற ஸ்ரீபாஷ்யஸூக்தியானது ஆழ்வாரருளிச் செயற்கடலின் உள்ளமுதமென்று உணரவேணும். இந்த ஸ்ரீபாஷ்ய ஸூக்தி என்ன தெரிவிக்கின்றதென்று நோக்கவேணும். பகவான் ஸ்வதந்த்ரனேயாகி லும், *சுவையன் திருவின் மணாளன்* என்னப்பட்ட அவன் அரஸிகனல்லன், மூர்க்கனல்லன். ஞானியான ஒரு சேதநனை ஸம்பாதிக்க எத்தனை பாடுகள் பட்டா னவன்! என்பதை யாரே யறிவார்? அதிமாத்ர ப்ரீதிபாத்ரபூதனன்றோ பகவானுக்கு ஞானியானவன்? பலபல ஜன்மபரம்பரைகளில் தோள்மாறி எம்பெருமானைக் கனவிலுங்காணாதேயிருந்து, பிள்ளையுலகாசிரியர் ஸ்ரீவசநபூஷண த்ரிபாத்விபூதி சூர்ணையிலே "நன்மையென்று பேரிடலாவதொரு தீமையுங்காணாதே நெற்றியைக் கொத்திப் பார்த்தால் ஒரு வழியாலும் பசைகாணாதொழிந்தால் அப்ராப்யமென்று கண்ணநீரோடே மீளுவது. தனக்கேற இடம் பெற்றவளவிலே என்னூரைச் சொன்னாய் என் பேரைச் சொன்னாய் என்னடியாரை நோக்கினாய் அவர்கள் விடாயைத் தீர்த்தாய், அவர்களுக் கொதுங்க நிழலைக் கொடுத்தாய் என்றாப் போலே சிலவற்றை ஏறிட்டுமடிமாங்காயிட்டு" என்றருளிச் செய்த கணக்கிலும். தேசிகன் (சரணாகதி தீபிகையிலே) *ஸ்வேநைவ க்லப்தமபதேசமவேக்ஷமாண: * என்று பணித்தபடியும் தானாக ஏறிட்ட சில ஸுக்ருதங்களை வியாஜீகரித்துத் தன்னுடைய அளவுகடந்த அன்புக்குக் கொள்கலமாக்கிக் கொள்ளப்பட்டவ னன்றோ ஞானி யென்பான். அன்னவன் * பஹூநாம் ஜந்மநாமந்தே ஜ்ஞாநவாந் மாம் ப்ரபத்யதே * என்றபடி தன்னருகே வந்து சேர்ந்தால் அவனை எம்பெருமான் ஒருகாலும் திருப்பியனுப்பமாட்டான் என்று ஸ்வாமி அருளிச்

செய்தது [மீண்டும் மீண்டும் சொல்லுகிறேன்] அருளிச் செயற்கடலமுதமான சிறந்த பொருளேயாம்.

மேலும் இங்கு விமர்சிக்கவேண்டியது மற்ருென்றுமுண்டு. "ந ச பரம புருஷஸ் ஸத்ய ஸங்கல்ப:" இத்யாதி ஸ்ரீ பாஷ்ய வாக்யத்தில் "அத்யர்த்தப்ரியம் ஜ்ஞாநிநம் ந கதாசித் ஆவர்த்தயிஷ்யதி" என்றிவ்வளவுமட்டும் ஸாதித் திருந்தால் போதுமானது இதில் அநந்வயம் ஒன்றுமில்லையே. இடையில் (லப்த்வா) என்ருெரு பதம் ஏதுக்காக ஸ்வாமியிட்டருளினர்? தைத்திரீயோபநிஷத்தில் "ரஸோ வை ஸ:, ரஸம் ஹ்யேவாயம் லப்த்வா ஆநந்தீ பவதி" என்ருேதியுள்ளதற்கு மாருக [அதாவது-ஞானியானவன் எம்பெருமானைப் பெற்றுக் களிக்கிருனென்ற தற்கு மாருக] இவனை அவன் பெற்றதாக அருளிச் செய்திருப்பதன் மருமத்தை ஆராய்ந்துணரவேண்டாவா? (லப்த்வா) என்னுமிவ்விரண்டெழுத்தில்தான் ஸத்ஸம்ப்ரதாய ஸாரார்த்தம் நிரம்பிக்கிடக்கிறதென்று உணரவேணும். இவன் அவனைப் பெறுதற்கு ப்ரயாஸலேசமும் படுகின்றிலன். "எனைத்தோர் பிறப்பு மெனக்கே யருள்கள்செய்ய விதிசூழ்ந்ததா லெனக்கேலம்மான் திரிவிக் கிரமனையே" என்கிறபடியே அவன் பட்ட பற்பல பரிச்ரமங்களினுலன்ருே இவன் ஞானியாகி அவனுடைய அங்கீகாரத்திற்கு இலக்காயினன். இதுதான் அருளிச் செயற்கடலின் ஆழ்பொருள். இவ்வர்த்தமே ஸ்ரீ பாஷ்யகாரருடைய திரு வுள்ளத்தில் ஊடுருவி உறைந்துகிடந்தது. இதை ஸ்ரீ பாஷ்யத்தில் வேறு எந்த இடத்திலும் வெளியிட்டருள ஸ்வாமிக்கு அவகாசம் கிடைக்கவில்லை; இதுதான் பொருத்தமான விடமென்று தேறி இங்கே மிக வழகாகப் பொறித்தருளினர்.

இவ்விடத்து ஸ்ரீ பாஷ்யத்தில் "ய ஏவமாஹ" என்று தொடங்கி யுள்ள வாக்யத்தில் * வாஸுதேவ: ஸர்வமிதி ஸ மஹாத்மா ஸுதுர்லப: * என்னுமளவும் உதாஹரித்துள்ளார்; (இது வேண்டா.) முக்தாத்மாவானவன் பரம புருஷனுக்குப் பரமப்ரீதிபாத்ர பூதன் என்று கீழே ஸாதித்த விஷயத்திற்கு "ப்ரியோ ஹி ஜ்ஞாநி நோத்யர்த்தம் அஹம் ஸ ச மம ப்ரிய: என்னு மிவ்வளவே உதாஹரிக்கவேண்டிய தாகிறது. * வாஸுதேவஸ் ஸர்வமிதி ஸ மஹாத்மா ஸுதுர்லப: * என்கிற வரைக்கும் உதாஹரிக்க என்ன ப்ரஸக்தி என்று கேட்டால் தினவட்டங்கவிடை கூறவேணுமே. கேண்மின். லப்த்வா என்ருெரு பதத்தை ப்ரயோகித்தருளின ஸ்வாமியின் திருவுள்ளம் இச்சேதனை பரமபதநாதனுக்குப் பெறுப் பேருகக் கிடைத்தான் என்பதுதானே. அது ப்ராமாணிகமான அர்த்தம் என்பதை உப பாதிக்கவேண்டியே "ஸ மஹாத்மா ஸுதுர்லப:" என்கிற பகவத் வசனத்தை எடுத்துக்காட்ட வேண்டியது அவச்யமாயிற்று. திருவேங்கடமுடையானுடைய ஸேவை துர்லபம் என்று ஒருவன் சொன்னுனுல் திருவேங்கடமுடையானுடைய ஸேவைக்கு அவன் எவ்வளவு பாடுபட்டிருப்பன் தெரியுமோ. மிகப் பாடு படாதவன் வாக்கில் ஸேவை துர்லபம் என்கிற வார்த்தை வெளிவராது. அவ்வித மாகவன்ருே எம்பெருமான் ஒரு ஜ்ஞானிசேதனனைப் பெறுவதற்குப் பாடு பட்டிருக்கிருன். அந்தப்ரயாஸத்தைத் தெரிவித்துக்கொண்டன்ருே 'ஸுதுர்லப:" என்று அருளிச் செய்தான். இதை நாம் இவ்வளவு விவரிக்கவேணுமோ?

ஸுதுர்லப: என்ற கீதாசார்யன் வசனமன்றே ஸ்வாமியின் திருக்கையால் ஸ்ரீபாஷ்யத்தில் ''லப்த்வா'' என்று எழுதுவித்தது.

மற்றொரு மஹாநிதியையும் இங்குக் காட்டுகிறேன் காண்மின். வாஸுதேவஸ்ஸர்வ மென்கிற கீதாவசனத்திற்கு பாஷ்ய மெழுதுகிற ஆதிசங்கராசாரியர் ''நாம் கண்ணால் காண்கிற பொருள்களெல்லாம் பகவானே என்று எவன் நினைக்கிருனே அவன் மஹாத்மா'' என்று உரையிட்டார். இது கண்டிக்கத் தக்க அர்த்தமன்று. ''ஸர்வபூதாத்மகே தாதா ஜகந்நாதே ஜகந்மயே'' என்று ப்ரஹ்லாதன் சொன்னபடியும் மற்றும் பல பல ப்ரமாணங்களின்படியும் நாம் காண்பதெல்லாம் பகவதாத்மகம் என்று நினைப்பது நன்றுதானே. ஆயினும் இவ்வர்த்தத்தை நம் ஸ்வாமி ஏன் கண்டிக்கிருர் என்று பார்க்கவேணும்; திருவாய்மொழியில் * உண்ணுஞ்சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையுமெல்லாம் கண்ணன் * என்கிற பாசுரத்தைச் சேவித்து ஆழ்வார் திருவுள்ளம் பற்றிய பொருளை அறுதியிட்டார். ஆனது பற்றியே [கீதாபாஷ்யத்தில்] 'அயமேவார்த்த:' என்று கல்வெட்டுச்செய்து எழுதியருளினுர்.

ஆக, வாஸுதேவஸ் ஸர்வமென்பதற்கு – காண்கிறவை யெல்லாம் கண்ணனெம்பெருமானென்று பொருளன்று,* எனக்கெல்லாம் (தாரக போஷக போக்யங்களெல்லாம்) கண்ண னெம்பெருமான் என்பதே பொருளென்று ஸ்வாமி திருவுள்ளமாகத் தேறிற்று. ஸ்ரீபாஷ்யம் உபக்ரமிக்கும்போது [அகிலேத்யாதி பாதத்தாலே] ஆழ்வாரைச் சிந்தனை செய்தே உபக்ரமித்தார்; தலைக்கட்டும் போதும் *வாஸுதேவஸ் ஸர்வமித்யாதியாலே ஆழ்வாரைச் சிந்தனைசெய்து கொண்டே தலைக்கட்டினுர்; முடிவில் சிந்தனை செய்தது மட்டுமன்று; அருளிச் செயலுக்கு ஜீவநாடியான ஸாரார்த்த விசேஷமொன்றைக்காட்டி ஸ்ரீபாஷ்யத்திற்கு நறுமணமூட்டினுரென்பது விசேஷித்தறியத்தக்கது.

'' [illegible]
[illegible] ।
[illegible]
[illegible] ॥ ''

என்கிற முதலியாண்டானுடைய ச்லோகரத்நத்தைச் சொல்லி ஸம்க்ஷேபமாக விவரித்துத் தலைக்கட்டப்பட்டது.

[illegible] ।
[illegible] ॥

மதுராந்தகவீரரகூத்வஹகுர்வபிதோ விபுதஸ் ஸமுபஸ்திதவாந்,
ஸஹ மித்ரகணைஸ். ஸுசிரம் ச்ருதவாந் அமிதம் ப்ரமதம் ப்ரகடீக்ருதவாந்.

[illegible] ।
[illegible] ॥

வாகம்ருதவர்ஷிஸூரி: சதாபிஷேகார்யபாஷ்யக்ருத்விபுதௌ,
ப்ராஜ்ஞஸுதர்சநபத்ராதிபஸ் ததாங்யே ச முதமவிந்தந்த.

[illegible]
[illegible]

வைதிகநோஹராயா ஏதந்மாஸீயஸஞ்சிகாயாஞ் ச,
இதமகிலமமரவாண்யா விசதீக்ருதமீக்ஷதாம் ஸதாம் ப்ருந்தம்.

---

## பதின்மரும் — ஐவரும்.

"பதின்மரும் ஐவரும்" என்ற மகுடம் புனைந்தவொரு நூலை இன்று எழுதத் தொடங்கினேன். பதின்மர் என்றது—"பொய்கையார் பூதத்தார் பேயார்" என்னும் உபதேசரத்தினமாலைப் பாசுரத்தில் பேசப்பட்டுள்ள ஆழ்வார்கள் பதின்மரை. ஐவர் என்றது-ஸ்ரீமந் நாதமுனிகள், ஆளவந்தார், எம்பெருமானார், கூரத்தாழ்வான் பட்டர் என்னும் ஆசாரியர்கள் ஐவரை. இவ்வாசாரியர்கள் ஐவரும் தங்கள் ஸ்ரீஸூக்திகளில் ஆழ்வாரைப் புகழ்ந்திருக்கும் வகைகளையும், ஆழ்வார்கள் வெளியிட்டிருக்கும் அர்த்தவிசேஷங்களைக் கையாண்டிருக்கும் பரிசுகளையும் விளங்க விவரிப்பதே இந்நூலின் பிரமேயமாகும். இவ்வாசாரியர்கள் ஐவர் தவிர மற்ற ஆசாரியர்கள் [நஞ்சீயர் தொடங்கி நம் மணவாளமாமுனிகளீருகவுள்ள ஆசாரியர்கள்] மணிப்ரவாள பாஷையில் ஸ்ரீஸூக்திகளருளிச் செய்தவர்களாகையாலே அந்த ஸ்ரீஸூக்திகளிலிருந்து விவரிப்பதை விட்டிட்டு மேலே ப்ரஸ்தாவித்த நாதமுனிகள்முதலிய ஆசாரியர்கள்ஐவரின் ஸ்ரீஸூக்திகளிலிருந்துமட்டும் ப்ரக்ருத உத்தேச்யத்தை நிறைவேற்றிக்கொள்ள விருப்பம். [ஸ்ரீமந்நாதமுனிகளின் ஸ்ரீஸூக்திகள் "யத்கோஸஹஸ்ரம்," பக்தாம்ருதம் இவ்வளவே.]

சென்னையில் வாழும் ஸஹ்ருதய ஸார்வபௌம. ஸ்ரீமான் உவே. R. V. சேஷாத்ரி ஐயங்கார் (அட்வகேட்) ஸுஹ்ருந்மணியின் நெடுநாளைய அபிலாஷையைப் பூர்த்திசெய்யவேண்டியே இப்பணியில் கைவைக்க நேர்ந்தது. நம்மவர்களுக்கு இது ஒரு அரிய பெரிய விருந்தாக வெளிவரும். அடுத்துவரும் மார்கழித் திங்களில் அடியேனுக்கு இதுவே விசிஷ்ய போதுபோக்காக நிகழும். ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவருளால் இப்பணி இனிது நிறைவேறவேணும்.

இங்களம், ஸ்ரீ. அண்ணங்கராசார்யன். 

---

# தென்னுடு வடநாட்டுத் திருப்பதி யாத்திரை
(முன் தொடர்ச்சி)

(மாதவன்) ஸ்ரீகாஞ்சீபுரியிலிருந்து இனி நாம் திருவல்லிக்கேணி முதலிய திவ்யதேசங்களை ஸேவிக்கப்போகவேண்டும். கூரம், மதுரமங்கலம், ஸ்ரீபெரும்பூதூர் திருமழிசை, திருக்கச்சிநம்பிகள் ஸன்னிதி, முதலியாண்டான் ஸன்னிதி ஆகிய இவற்றை ஸேவித்துக்கொண்டு சென்னைமாநகர் சென்று சேர்வோம். [என்று சொல்லிக் கேசவனோடு புறப்பட்டாயிற்று ]

## கூரம் [கூரத்தாழ்வான் ஸன்னிதி]

(கேசவன்) ஸம்ப்ரதாயத்தில் ஆழ்வான் என்றால் கூரத்தாழ்வானைத்தான் குறிக்கும். உடையவர் காலத்தில் நடாதூராழ்வான் என்றொருவர் எழுந்தருளியிருந்தபடியால் வாசி தெரிவதற்காகக் கூரத்தாழ்வான் என்று வழங்கி வந்தனர். காச்மீரதேசத்துச் சாரதாபீட புஸ்தகாலயத்தில் ப்ரஹ்மஸூத்ர வியாக்கியானமான போதாயநவ்ருத்தி க்ரந்தம் சேமிக்கப்பட்டிருப்பதை யறிந்த ஸ்ரீ ராமாநுஜர் அந்த ஸ்ரீகோசத்தைக் கடாக்ஷித்துவிட்டு ஸ்ரீபாஷ்யம் செய்தருளவேணுமென்று திருவுள்ளம் பற்றிப் பயணம் செய்தருளினபோது பல சிஷ்யர்கள் உடன்சென்றார்களாகிலும் அவர்களில் கூரத்தாழ்வான் தலைவராயிருந்தனர். ஸ்ரீநகரில் வ்ருத்தி க்ரந்தத்தைப் பெற்று எம்பெருமானர் ஒரு அத்யாயத்தைக் கடாக்ஷிப்பதற்குள்ளே ஆழ்வான் நான்கு அத்யாயங்களையுங் கடாக்ஷித்தருளித் திருவுள்ளத்தில் தேக்கிக் கொண்டாரென்று ப்ரஸித்தி. ஆனதுபற்றியே ஸ்வாமி ஸ்ரீபாஷ்யம் ஸாதித்தருளும்போது ஆழ்வானையே உசாத்துணையாகக் கொண்டு இவரையே பட்டோலை கொள்ளும்படி நியமித்தருளினர்.

## கூரத்தாழ்வான் பெருமை

*மொழியைக் கடக்கும் பெரும்புகழான், வஞ்சமுக்குறும்பாங்குழியைக் கடக்கும் நங்கூரத்தாழ்வான்* என்று திருவரங்கத்தமுதனாரும், *வாசாமகோசர மஹாகுணதேசிகாக்ர்ய கூராதிநாத.........* என்று மணவாளமாமுனிகளும் கையொழிந்த கூரத்தாழ்வான் பெருமையை யாரேகூறவல்லார்? இவர் பெருமையை இவரது தனியனே விளக்கிநிற்கும். *ஸ்ரீவத்ஸ சிஹ்நமிச்ரேப்யோ நமஉக்திமதீமஹே, யதுக்தயஸ்த்ரயீகண்டே யாந்தி மங்கலஸூத்ரதாம்* என்பது பட்டரருளிச்செய்த ஆழ்வான் தனியன். இதில் உத்தரார்த்தம் என்ன தெரிவிக்கின்றதென்றால், ஆழ்வான் ஸ்ரீஸூக்திகள் அருளிச்செய்யாதிருந்தால் வேதமெல்லாம் மங்கலஸூத்ரமில்லாத மாதரைப் போன்றிருக்குமென்கிறது. மாதர்க்கு மங்களஸூத்ரமில்லாத நிலைமைகள் இரண்டு; கன்னிகைப் பருவமும் விதவைப்பருவமும். கன்னிகைப் பருவத்தில் பல ஆண்கள் தங்களைக் கணவர்களாக ஆசைப்பட்டிருப்பர்கள். விதவைப் பருவத்தில் 'கணவன் இல்லை' என்றாகும். அதுபோல, ஆழ்வானுடைய ஸ்ரீஸூக்தி அவதரியாவிடில் பலபலதெய்வங்களுள்ளனவெனாறும் தெய்வமே யில்லை

யென்றும் குத்ஸிதவாதங்கள் தலைவிரித்தாடும். அதற்கு ஈஷத்தும் அவகாசமில்லாத படி செய்துவைத்தவை ஆழ்வான் ஸ்ரீஸூக்திகளேயாம்- வேதமாதுக்குத் தாலி கட்டினவர் கூரத்தாழ்வான் என்றதாயிற்று. *அர்வாஞ்சோ யத்பதஸரஸிஜத்வந்த்வமாச்ரித்ய, பூர்வே மூர்த்நா யஸ்யாந்வயமுபகதா தேசிகா முக்திமாபு: ஸோயம்ராமாநுஜ முநிரபி ஸ்வீயமுக்திம் கரஸ்தாம் யத்ஸம்பந்தாத் அமநுத கதம் வர்ண்யதே கூரநாத:!* என்கிற ச்லோகமும் ஆழ்வானுடைய ஒப்புயர்வற்ற பெருமையைக்காட்டும்.

(மாதவன்) இவ்விடத்திலேயே ஆழ்வான் திருக்குமாரரான பட்டருடைய திருக்கோலமும் ஸேவை ஸாதிப்பதால் அவருடைய அம்ருதஸாகரமான ஸ்ரீஸூக்திக் கடலில் ஏதேனுமொரு ஸ்ரீஸூக்தி பிந்துவை யெடுத்துப் பொருள்கூறக்கேட்க விரும்புகிறேன்.

(கேசவன்) ஆனந்தமாகச் சொல்லுகிறேன் ! கேளாய்; தைவாதீனமாக நினைவூட்டினாய்.

## நம்பெருமாள் திருமஞ்சனமும் பட்டர் ஈடுபாடும்

பட்டர் கோயிலில் வாழும் நம்பெருமாளுடைய திருமஞ்சனங்களை ஸேவிக்குங் காலங்களில் அந்த ஸந்நிவேசத்தில் ஈடுபட்டும் வடிவழகில் ஈடுபட்டும் சமத்காராதிசயம் பொலியப் பலச்லோகங்களை அருளிச் செய்திருக்கிறார். அவை நாளைக்கும் அவருடைய திருவம்சஸ்தர்களால் திருமஞ்சன ஸமயங்களில் விண்ணப்பம் செய்யப்பட்டு வருகின்றன. அவற்றுள் "த்வம் மே அஹம்மே" என்கிற ஒரு ச்லோகம் மிகவும் அற்புதமாக அமைந்தது. இதனை நம் ஆசாரியர்கள் வியாக்யாந க்ரந்தங்களிலே கையாண்டு வருகின்றனர். இதன் அரிய பெரிய பொருள் இங்கு விவரிக்கலாகிறது. ஸ்ரீ ரங்கநாதன் தோளிணை மேலும் நன்மார்பின்மேலும் சுடர்முடிமேலும் தாளிணை மேலும் புனைந்த தண்ணந்துழாய் மாலையையுடையனாய்த் திருமஞ்சனங் கொண்டருள ஸந்நத்தராயிருக்கும்படியைப் பார்த்தால் பிரமாணம் செய்ய ஸித்தராயிருக்கிறாரோ என்று உத்ப்ரேக்ஷிக்கலாம்படி யுள்ளது என்று பட்டர் திருவுள்ளம் பற்றுகிறார். உலகத்தில் பிரமாணம் செய்பவர்கள் துளசிமாலை யணிந்துகொண்டு ஒரு முழுக்குப் போடுவது வழக்கமாதலால் எம்பெருமானும் அங்ஙனே செய்கிறானோ என்று உல்லேகிக்கிறார். பிரமாணம் செய்யவேண்டிய அவசியம் எம்பெருமானுக்கு என்ன வந்தது என்னில், உலகத்தில் பிரமாணம் செய்பவர்கள் எதற்காகச் செய்வது வழக்கம் என்று பார்த்தால், ஒருவன் தன்னுடைய ஸொத்தைப் பிறன் கொள்ளை கொண்டால் அதைத் தனக்கு ஸ்வாதீனப் படுத்தித் தரவேணுமென்று நியாயாலயத்தில் விண்ணப்பம் செய்துகொண்டு உண்மையில் அந்த ஸொத்து யாருடையது என்று தெரிந்துகொள்வதற்காக ஸாக்ஷி விசாரணை முதலியன செய்யப்படுங் காலத்திலே தகுந்த ஆதாரங்களைக்கொண்டு உண்மையை ஸ்தாபித்துக் கொள்ள முடியாமல் அந்தோ! நம்முடைய ஸொத்தை அநியாயமாக இழந்துவிட நேருகின்றதே! என்கிற அநுதாபமுடையார் கடைசியாக ஒருவார்த்தை சொல்லுவதுண்டு: "இது என்னுடைய ஸொத்துதான் என்று பிரமாணம் செய்ய நான் துளசி மாலை யணிந்து முழுக்கிட்டு விடுகிறேன்; நியாயாதிபதிகள் அதுகொண்டாவது

உண்மை யுணரவேண்டும்'' என்பர்கள். நியாயாதிகாரிகளும் அதனை ஆதரித்துத் தீர்ப்புக் கொடுப்பதுண்டு. இது இன்னமும் வழக்கத்திலுள்ளது. இவ்விதமாகவே எம்பெருமானுக்கும் பிரமாணம் செய்யவேண்டிய ஆவச்யகதை நேர்ந்து விட்டதாம். அது ஏதெனில், சேதநவர்க்கம் என்கிற ஸொத்து எம்பெருமானுடையது. ஆனால் அந்த ஸொத்தை ''பண்டே யுன்தொண்டம் பழவுயிரை யென்னதென்று கொண்டேன்'' என்கிறபடியே ஸம்ஸாரிகள் கொள்ளை கொண்டார்கள். இந்த ஸொத்து என்னுடையது என்கிறான் எம்பெருமான். ஸம்ஸாரிகளோ 'இது உன்னுடையதல்ல, எங்களுடையதே' என்கிறார்கள். விவாதம் முற்றிவிட்டது; ஸம்ஸாரிகள் அடாவடியில் பலிஷ்டர்களாகையாலே அவர்களுடைய வாதமே மேம்பட்டு எம்பெருமானுடைய வாதம் தோல்வி யடையும்படியான நிலைமையிலே வந்துவிட்டது; அந்தோ! அந்யாயமாய் நம்முடைய ஸொத்தை இழந்துவிட நேருகின்றதே! என்கிற பரிதாபம் எம்பெருமானுக்கு உண்டாய் விட்டது. 'இந்த ஸொத்து என்னுடையதுதான் என்று பிரமாணம் செய்தாகிலும் இதனை நாம் இழவாமல் அடைந்தே தீரவேண்டும்' என்கிற அபிநிவேசம் எம்பெருமானுக்கு உண்டாய் விட்டது. அது துளசிமாலை யணிந்து முழுக்கிட்டுச் செய்யவேண்டிய காரியமாதலால் இந்தத் திருமஞ்சன மென்கிற வியாஜத்தாலே அது செய்யப்படுகிறது போலும் என்பது பட்டருடைய உல்லேக சமத்காரம். ஈச்வரனுக்கும் சேதநனுக்கும் நடந்த விவாதம் ஒரு ஸம்வாத ரூபமாக இந்த ச்லோகத்தில் அழகாய்க் காட்டப்படுகிறது.

ச்லோகம் வருமாறு:—

த்வம் மே அஹம் மே குதஸ் தத் ததபி குத இதம் வேதமூலப்ரமாணாத்,
ஏதச்சாநாதி ஸித்தாதநுபவவிபவாத் ஸோபி ஸாக்ரோச ஏவ,
க்வாக்ரோச: கஸ்ய கீதாதிஷு மம விதித: கோத்ர ஸாக்ஷீ ஸுதீஸ் ஸ்யாத்
ஹந்த த்வத்பக்ஷபாதீ ஸ இதி ந்ருகலஹே ம்ருக்யமத்யஸ்தவத்த்வம்.

(பொருள்.) த்வம் மே—இது எம்பெருமான் ஸம்ஸாரிசேதநனை நோக்கிச் சொல்லும் வார்த்தை. சேதநா! நீ என்னுடைய சரக்கு என்றானெம்பெருமான். அதாவது நீ எனக்கு அடிமைப்பட்டவனென்றபடி. சேதநன் ஸ்வாதந்திரியம் பாராட்டி வணங்காமுடிமன்னனாய்க் கிடந்தபடியாலே எம்பெருமான் இந்த வார்த்தை சொல்லவேண்டியதாயிற்று.

அஹம் மே—அதற்கு ஸம்ஸாரி பதில் சொல்லுகிற வார்த்தை இது நான் உனக்கு அடிமைப் பட்டவனல்லேன், எனக்கு நானே அரசன் என்றான் ஸம்ஸாரி. எம்பெருமான் ''த்வம் மே'' என்றது போலே ஸம்ஸாரியும் பதிலுக்கு 'த்வம் மே' என்னலாமே; அப்படி ஏன் சொல்லவில்லை? 'நானா உனக்கு அடிமைப்பட்டவன்? நீதான் எனக்கு அடிமைப்பட்டவன்' என்று ஸம்ஸாரி சொல்லியிருக்கலாமே; ஏன் அங்ஙனம் சொல்லவில்லை என்னில், இப்படிப்பட்ட பதில் ஸம்ஸாரி சொல்லியிருந்தானாகில் எம்பெருமான் பெறும்பேறு பெற்றானாவனே; தான் சேஷியா யிருப்பதிலுங்காட்டில் சேஷபூதனா யிருக்குமிருப்பிலே மிகவும் குதூஹலமுடையானன்றோ அவன். ஏதேனுமொரு படியாலே சேதநனோடு தனக்கு ஸம்பந்தம் ஏற்பட்டால் போதும் என்று பாரிப்பவனன்றோ அவன்; சேஷியாகவே தானிருக்கவேணுமென்

கிற எண்ணம் இல்லையே அவனுக்கு! ஸம்ஸாரிகள் தன்னோடு உறவை அறுத்துக் கொண்டு போகாமல் தன்னை அடியவனாகக்கொண்டு பரிமாறினாலும் பரமதிருப்தி பெறுபவனன்றோ அவன். அது தோன்றவன்றோ 'த்வம் மே' என்று ஸாவசேஷமாய்க் கிடக்கிறது. த்வம் மே தாஸ: என்றோ த்வம்மே ப்ரபு: என்றோ விவக்ஷித்துச் சொன்ன படி. ஏதேனுமொருபடிக்கு ஸம்ஸாரி இசைந்திடுவனோ என்று பார்த்தான் எம் பெருமான். ஸம்ஸாரி மஹாசதுரனாகையாலே 'இவனோடு நமக்கு எவ்விதமான உறவும் தேவையில்லை; அவன் நமக்கு அடியவனாக இருக்க இசைந்தாலும் அதற்கும் நாம் இசையவே கூடாது; அடியவன்போலே இருந்து காலக்ரமத்தில் நம்மையே அடிமைப்படுத்திக்கொள்ளவல்ல கிறியான் அவன்; ஆதலால் அவனுடைய எல்லையி லும் நாம் செல்லாமல் இருந்துவிடுவதே நமக்குத் தகுதி' என்று ஸம்ஸாரி நினைத் தானாகையாலே அஹம் மே என்று, எம்பெருமானுக்குப் பிடிகொடாமலே விடை யளித்து விட்டான்; இவனும் த்வம் மே என்று பதில் சொல்லி யிருந்தானாகில் அவ் வளவோடு விவாதம் சாந்தமாகியிருக்குமே; எம்பெருமானே வெற்றி பெற்றனாய் விடுவனே; அதற்கு ஸம்ஸாரி இடம் தரவில்லை.

குத: தத்- (தத் குத:?) 'அஹம் மே' என்று சொன்ன ஸம்ஸாரியை நோக்கி எம்பெருமான் கேட்கிறான். எதனால் நீ அப்படிச் சொல்லுகிறாய்? என்று.

தத் அபி குத:?—நீ த்வம்மே என்று சொன்னாயே, அது எதைக்கொண்டு சொன் னாய்? என்று ஸம்ஸாரியின் பதில்கேள்வி இது.

இதம் வேதமூலப்ரமாணாத்—சேதநா! வேதமாகிற மூலப்பிரமாணத்தைக்கொண்டு நான் த்வம்மே என்று சொன்னேன் என்கிறவிது எம்பெருமானுடைய பதில். 'பதிம் விச்வஸ்யாத்மேச்வரம்' இத்யாதிப்ரமாணங்கள் இங்குக் கொள்ளத்தக்கன.

ஏதச்ச அநாதிஸித்தாத் அநுபவவிபவாத்—(இது ஸம்ஸாரியின் பதில் வார்த்தை.) நீசொல்லுகிற ப்ரமாணம் ஓலைப்படா ப்ரமாணமாகையாலே வெளிக்கு வரமாட் டாதது; அஹம்மே என்று சொன்ன எனக்கு ஸாதகமான ப்ரமாணம் அப்படிப்பட்ட தன்று. அநாதிகாலமாக ஸ்வாதந்திரியத்தை நான் அனுபவித்துக்கொண்டு வருவ தால், அநுபவமே ப்ரபல ப்ரமாணமாகையால் இதனால் உன்னுடைய வேதம் அடி பட்டொழிந்தது என்றான். உலகத்திலும் ஒரு க்ருஹம் ஒருவனுடையதென்று சாஸனபத்திரங்கள் இருந்தாலும் நெடுநாளாக அந்த க்ருஹத்தை வேறொருவன் அநுபவித்துவந்தால் அவனே அதற்குச் சொந்தக்காரனாக ஆய்விடுவன் என்றும். உண்மையான உடையவன் இழந்துபோய் விடுவான் என்றும் காண்கிறோம். அது போல், எம்பெருமானே உடையவனென்று சாஸநமிருப்பினும் அநாதியான அநு பவம் ஸம்ஸாரியினுடையதாகையாலே அந்த சாஸநம் துர்பலமாக இவனால் நிரூ பிக்கப்பட்டது. ஸம்ஸாரியும் கிரமமான வழியிலேயே வழக்காடுகிறான் போலும்.

ஸோபி ஸாக்ரோச ஏவ—(அதற்கு எம்பெருமானுடைய பதில் இது.) சேதநா! நெடுங்காலமாக உனக்கு ஸ்வாதந்த்ரிய அநுபவம் உண்டென்பது உண்மையே; அதை நான் அபலபிக்கவில்லை. ஆனால் அந்த அநுபவம் நிராக்ஷேபமாக இருந்தா லன்றோ செல்லும். அப்படியில்லையே. உனது அநுபவம் ஆக்ஷேபத்தோடு கூடிய தாயிற்றே! அதனை நீ சொல்லிக்கொள்வதனால் உனக்கு லாபமில்லையே என்றானெம்

பெருமான். உலகத்திலும் ஒரு க்ருஹத்தைப் பிறன் ஒருவன் நெடுநாளாய் அநுபவத்தில் வைத்துக்கொண்டிருந்தாலும் அந்த அநுபவத்தை அடிக்கடி சொந்தக்காரன் ஆக்ஷேபித்துக் கொண்டிருந்ததாகப் புலப்பட்டுவிட்டால் அவ்வநுபவம் செல்லமாட்டாதென்பது ப்ரஸித்தம்.

ஆக்ரோச: க்வ? கஸ்ய ஆக்ரோச:?—(இது ஸம்ஸாரியின் வினா) என்னுடைய ஸ்வாதந்திரியாநுபவம் ஆக்ஷேபிக்கக்கூடியதென்று நீ சொன்னாய்; அப்படிச் சொல்லிவிட்டால் போதுமா? ஆக்ஷேபம் செய்திருப்பது யார்? ஆக்ஷேபம் எவ்விடத்தில் செய்யப்பட்டிருக்கிறது? அதையெல்லாம் விசதமாகச் சொன்னாலல்லவோ உன்னுடைய வாதம் ஏறும்.

கீதாதிஷு மம விதத:— (இது எம்பெருமானுடைய மறுமொழி.) க்வ என்று கேட்டதற்கு 'கீதாதிஷு' என்பது பதில். கஸ்ய என்று கேட்டதற்கு 'மம' என்பது பதில். சேதநா! பகவத்கீதை முதலானவற்றிலே (உன் ஸமூஹத்தில் தலைவனான அர்ஜுனனென்கிற ஒருவனை வைத்துக்கொண்டு) சேதந ஸ்வாதந்திரியத்தை நான் ஆக்ஷேபித்திருக்கிறேனென்பதை நாடு நகரமும் நன்கறியும். என்றைக்கோ ஒருநாள் ஏதோவொரு மூலையிலே நீ ஆக்ஷேபித்திருந்தால் அது செல்லுமோ வென்று ஸம்ஸாரி சொல்லுவதற்கு இடமில்லாதபடி 'விதத:' எனப்பட்டது. கீதை நடையாடாத இடமில்லை; கீதைக்கு ப்ரசாரமில்லாத காலமுமில்லை; கீதையைத் தெரிந்து கொள்ளாத வ்யக்தியுமில்லை என்ற அபிப்ராயங்கள் இச்சொல்லில் பொதிந்துள.

அத்ர க: ஸாக்ஷீ—(இது ஸம்ஸாரியின் கேள்வி) வ்யவஹாரம் என்று வந்துவிட்டால் ஸாக்ஷிவிசாரணை இருந்தே தீரவேண்டும். எத்தனை சாஸநபத்திரங்கள் இருந்தாலும் ஸாக்ஷிகளைக் கொண்டு நிரூபிக்கவேண்டியது முறைமை. உனக்கு ப்ரமாணமான வேதங்களும் கீதை முதலியனவும் கிடக்கட்டும். பெட்டியின்மீது ஏறிச் சொல்லுவதற்கு ஒரு ஸாக்ஷி வேணுமே. யார் ஸாக்ஷி? என்கிறான் ஸம்ஸாரி. எம்பெருமான் தவிர மற்ற எல்லாச்சேதநர்களும் ஸம்ஸாரிகளேயாதலால் அவர்களும் திறம்பேயென்றிருப்பவர்களேயாதலால் இவனுக்கு ஸாக்ஷிகள் எங்ஙனம் கிடைக்கப் போகிறார்களென்பது சேதநனுடைய எண்ணம். எம்பெருமானுடைய பாக்யத்தாலே ஸம்ஸாரிகளினிடையே முமுக்ஷுக்களும் சிலர் இருப்பதால் அவர்கள் தனக்கு ஸாக்ஷிகளாக இருக்கத் தகுதியுடையார் என்றெண்ணின எம்பெருமான் ஸந்தி: ஸ்யாத் என்றான். ஞானிகளெல்லாரும் என்பக்ஷத்தில் ஸாக்ஷிகளாக நிற்கக்கூடும் என்றபடி. (ஸந்தி: என்பதை ஜாத்யேகவசநமாகக் கொள்க.) அஸ்தி என்று உறுதியாகச் சொல்லாமல் ஸ்யாத் என்றது ஏனென்னில், இவ்விருள் தருமா ஞாலமானது ப்ரஹ்லாதாழ்வானையு முட்பட எதிரம்பு கோக்கப் பண்ணின தாகையாலே ஞானிகளும் ஸமயத்திலே நம்மைக் கைவிடும்படி நேர்ந்துவிடுமோ என்னவோ என்கிற அதிசங்கை தோன்றி அதை ஸ்யாத் என்பதனால் காட்டினனென்க. "விண்ணுளார் பெருமாற்கு அடிமை செய்வாரையும் செறுமைம்புலனிவை" ஆதலால் யாரையும் நம்புவதற்கில்லையென்றெண்ணியும் போலும்.

ஹந்த! த்வத்பக்ஷபாதீ ஸ:—(இது ஸம்ஸாரியின் பதில்.) ஸாக்ஷிகள் மத்யஸ்தர்களாக இருக்கவேண்டும். உறவினர்களையே கொண்டு சொல்லுவிக்கப்படுகிற ஸாக்ஷியம் உபயோகப்படாது. ஞானிகளை சாக்ஷியாகச் சொன்னது பொருந்துமோ? "ஜ்ஞாநீ து ஆத்மைவ மே மதம்" என்று கீதையில் நீயே சொல்லியிருக்கிறாயே; உனது உயிர் நிலையாகவன்றோ ஞானிகள் இருப்பது. வாதியே ஸாக்ஷி என்று சொன்னதாகத் தேறிற்றேயல்லது பிறனொருவன் ஸாக்ஷியாகக் கூறப்பட்டானில்லையே என்றான் ஸம்ஸாரி.

இதற்குமேல் எம்பெருமான் என்னசெய்வான்! ஸம்ஸாரிகள் யாவரும் பிரதிவாதிகளாக ஆய்விட்டபடியால் அவர்களில் ஒருவரும் ஸாக்ஷிகளாக நில்லார், முமுக்ஷுக்களோ தன் வகுப்பில் சேர்ந்துவிட்டபடியாலே அவர்களுடைய சாக்ஷ்யம் அப்ரயோஜநமென்று கண்ணழிக்கப்படுகிறது. அப்படிப்பட்ட ஸம்ஸாரிகளையும் விடமாட்டாதிருக்கிறான். வ்யவஹாரத்திலோ தான் தோல்வியடையவேண்டியவனாக முடிந்துவிட்டது. 'நம்முடைய நல்ல ஸொத்தை நாம் அநியாயமாய் இழந்துவிடுவதா! என்று பரிதபிக்கின்றான். இந்த நிலைமையில் தைவாதீனமாய் ஒரு உபாயம் ஸ்புரித்ததாம்; அதாவது, ஸம்ஸாரியினுடைய வாயாடித்தனத்தினால் நமக்கு வ்யவஹாரத்தில் பழுது ஏற்பட்டாலும் ஸொத்து நம்முடையதேயென்பது ஸ்த்யமாதலால், கண்டிப்பாக ப்ரமாணம்பண்ணிக்கொடுத்து ஸொத்தைப் பெற்றுக்கொள்வதென்ற முறைமையும் அரசாங்கத்தில் இருப்பதால் அந்த் வகையில் நாம் வெற்றி பெறக்கடவோம் என்று தோன்றிற்றும்.

[இதி ந்ருகலஹே ம்ருக்யமத்யஸ்தவத் த்வம்]

இதி—இவ்விதமாக, ந்ருகலஹே - சேதனனோடு விவாதமுண்டாகித் தனக்குத் தோல்வி விளைந்த வளவில், த்வம் ம்ருக்யமத்யஸ்தவத் (ப்ரகாசஸே) = தேவரீர் ப்ரமாணம் செய்ய ஸந்நத்தர்போலே விளங்கா நின்றீர். "ப்ரமாணம் கர்த்துமுத்யுக்தோ மருக்யமத்யஸ்த உச்யதே" என்பது நிகண்டு. துளசிமாலையணிந்து முழுக்கிடுபவன் தானே பிரமாணம் செய்பவன்.

இந்த உத்ப்ரேக்ஷையினால் நமக்குக் கிடைக்கும் பொருள் யாதெனில்; எம்பெருமானோடு நாம விவாதப்படாமல் இருக்குமளவே போதுமென்பதும், எவ்வகையினாலேனும நம்மை அடிமைப்படுத்திக்கொள்ள அவன் வழிதேடுகின்றவன் என்பதும, நாமெல்லாம அவனுடைய உடைமை யாதலால் நம்மை ஆட்படுத்திக்கொள்வதிலேயே நோக்குடையனான அவனை நினைத்து நாம் மார்பிலே கைவைத்துறங்கலாமென்பதுமாம.

கூரத்திலிருந்து எம்பார் ஸன்னிதிக்கு வந்து சேர்ந்தார்கள் கேசவனும் மாதவனும்.

## மதுரமங்கலம் (எம்பார் ஸன்னிதி)

(கேசவன்) இத்தலத்திற்கு மழலைமங்கலம் என்பது நூல் வழக்கு. கோவிந்த பட்டர் என்பது எம்பாருடைய திருநாமம். எம்பெருமானென்கிற திருநாமத்தின் சிதைவாகவே எம்பார் என்கிற திருநாமம் அமைந்தது.

## எம்பார் அநுபவம்

(கேசவன்) ஸ்ரீரங்கத்தில் நம்பெருமாள் ஸந்நிதியில் குடமுறைக்காரிகளெனப்படும் தாஸிகள் ஸமயவிசேஷங்களில் பாட்டுக்கள் பாடுவதுண்டு; அவர்கள் தங்களுக்குத் தெரிந்த சில பாட்டுக்களையே பாடிக்கொண்டிருந்தார்கள். எம்பெருமானார் விஷயமாக ஒரு பாசுரத்தை எம்பார் இயற்றி அவர்களுக்குக் கொடுத்து இதைக் கண்டபாடம் செய்து பாடுங்கள் என்று நியமித்தார். அந்த பாசுரமாவது,

"பற்பமெனத் திகழ்பைங்கழலுன்றன் பல்லவமே விரலும்
பாவனமாகிய பைந்துவராடைபதிந்த மருங்கழகும்
முப்புரிநூலொடு முன்கையிலேந்திய முக்கோல்தன்னழகும்
முன்னவர் தந்திடுமொழிகள் நிறைந்திடுமுறுவல் நிலாவழகும்
கற்பகமேவிழிகருணை பொழிந்திடு கமலக்கண்ணழகும்
காரிசுதன் கழல்சூடிய முடியும் கனநற்சிகைமுடியும்
எப்பொழுதும் எதிராசன் வடிவழகென்னிதயத்துள்ளதால்
இல்லையெனக் கெதிரில்லை யெனக்கெதிரில்லை யெனக்கெதிரே."

என்பதாம். இதைக் கண்டபாடம்செய்த தாஸியானவள் ஒருநாள் பின்மாலையில் தன் மகளுக்குப் பாடம் கற்பித்துக்கொண்டிருந்தாள். எம்பார் அனுஷ்டானத்திற்குத் திருக்காவேரிக்கெழுந்தருளும் வழியில் அந்த தாஸியின் வீடு இருந்தபடியால், தாம் காவிரிக்கெழுந்தருளும்போது அந்த மனையினுள்ளே அவள் கற்பிக்கும் த்வனியைக் கேட்டருளின எம்பார் ஆனந்தபரவசராய் அந்த வீட்டிலேறி வெளித்திண்ணையில் வீற்றிருந்து சிறிதுநேரம் கேட்டருளிக் கீழே யிறங்கிக் காவிரிக்குச் சென்றார். அப்போது காவிரிக்குச் செல்லும் சில பெண்டுகள் 'இதென்ன! எம்பார் இந்த அகாலத்தில் இந்த மனையில் நின்றும் புறப்பட்டுப்போவதே!' என்று அதிசங்கை கொண்டு *சில்லைவாய்ப் பெண்டுகளாகையாலேபலர்கூடி ஆங்காங்கு ஏசிப் பேசிக்கிடந்தார்களாம். இஃது எம்பெருமானார் திருச்செவியளவும் எட்ட, ஸ்வாமி தத்துவமுணர்ந்து எம்பாருடைய விரக்தியின் பெருமையை வெளியிட்டருளினர்.

(மாதவன்.) ஸேவித்துவிட்டு இங்கிருந்து ஸ்ரீபெரும்பூதூர்க்குச் செல்வோமென்று சொல்ல, இருவரும் ஸ்ரீபெரும்பூதூர் சென்று சேர்ந்தனர்.

## ஸ்ரீபெரும்பூதூர்

(கேசவன்.) உள்ளேசென்று ஸேவித்துவிட்டு காயத்ரீ மண்டபத்தில் திரளாகவிருந்து ஸ்ரீஸ்வாமியின் க்ருபாமாத்ரப்ரஸந்நாசார்யத்வத்தை உபந்யஸிக்கத் தொடங்கி,



*ஓராண் வழியாய் உபதேசித்தார் முன்னோர்,
ஏராரெதிராசரின்னருளால்—பாருலகில்
ஆசையுடையோர்க் கெல்லாம் ஆரியர்காள்! கூறுமென்று,
பேசி வரம்பறுத்தார் பின்*

என்கிற உபதேசரத்தினமாலைப் பாசுரங்கொண்டு ப்ரக்ந உபந்யஸித்து, பிறகு இருவரும் திருமழிசைக்குப் பயணமாயினர்.

வாழியெதிராசன் வாழியெதிராசன்
வாழியெதிராசனென வாழ்த்துவார்—வாழியென
வாழ்த்துவார் வாழியெனவாழ்த்துவார் தாளிணையில்
தாழத்துவார் விண்ணோர் தலை.

---

## திருமழிசை

(கேசவன்) மஹீஸாரக்ஷேத்ரமென்று வடமொழித் திருநாமம்.

"உலகும் மழிசையுமுள்ளுணர்ந்து தம்மில்,
புலவர் புகழ்க்கோலால் தூக்க—உலகுதன்னை
வைத்தெடுத்த பக்கத்தும் மாநீர்மழிசையே,
வைத்தெடுத்தபக்கம் வலிது."

என்கிற தனியன் பாசுரத்தை இங்கே பரக்கஉபந்யஸித்தாயிற்று. முற்றும் ஸேவித்து, திருக்கச்சிநம்பிகளின திருவவதார ஸ்தலமான பூவிருந்தவல்லிக்குச் சென்று சேர்ந்தனர்.

## பூவிருந்தவல்லி

ஸந்நிதியெல்லாம் ஸேவித்து நம்பிகளின் பெருமைகளைக் கேசவன் பேசி யநுபவிக்கும்படி:—

இவ்வாசிரியர்க்கு "ராமாநுஜமுநேர் மாந்யம்" என்கிற விசேஷணம் அற்புதமானது; இவர் தேவப்பெருமாளிடம் ஆறு வார்த்தைகள் பெற்று உடையவர்க்கு உரைத்தாரென்பது இவருடைய ஏற்றத்தைக் காட்டும். "ஸ்ரீ காஞ்சி பூர்ணமிச்ரேண ப்ரீத்யா ஸர்வாபிபாஷிணே, அதீதார்ச்சா வ்யவஸ்தாய ஹஸ்த்யத்ரீசாய மங்களம்" என்றருளிச்செய்தார் மணவாளமாமுனிகளும். ஆறுவார்த்தைகளாவன: "அஹமேவ பரம் தத்வம தர்சநம் பேத ஏவ ச, மோக்ஷோபாய: ப்ரபத்திஸ் ஸ்யாத், பூர்ணசார்ய ஸமாச்ரய: தேஹாவஸாநே முக்திஸ் ஸ்யாத் அந்திமஸ்ம்ருதி வர்ஜநம்". இதையடியொற்றி வடிவழகியநம்பி தாஸர் பணித்த பாசுரங்கள் இரண்டு:

"செப்புகின்ற பரதத்வம் யானேயென்னச் செப்புதி, வே-
றெப்பிலாதாய! தரிசனமும் பேதமெனறே யுரைத்திடுக
தப்பிலாத்வுபாயமதுப் ப்ரபத்தி யெனறே சாற்றிடுக
அப்பா! புகலக இவையன்றி நினைவும் வேண்டா அந்திமத்தில்

இந்தச்சரீர அவசானந்தனனிலிசையும மோக்கமது
அந்தமிலலாக் குணததினனுக்கு ஆசாரியனும் பெரியநம்பி
சிந்தைதன்னுளிவை யெல்லாம சிந்தித்திருந்தானிளை யாழ்வான்
முந்தியிவ்வை நீமொழியென்று மொழிந்தருள்வா னருளாளன்."

இந்த ஆறுவார்த்தைகளையும் பரக்க உபந்யஸித்து முடித்தபின் முதலியாண்டான் ஸந்நிதிக்குப் புறப்பட்டார்கள். (தொடரும்)

# [illegible]

இப்பெயருடன் வெளிவந்துகொண்டிருந்த ஸ்ரீ ராமாநுஜன் அநுபந்த ஸஞ்சிகை ஸ்ரீ ராமாநுஜனிலேயே சேர்ந்துவிட்டபடியால் இனி அது தனிப்பட வெளிவராது



ஸ்ரீ:

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்

ஸ்ரீ காஞ்சீ பிரதிவாதிபயங்கரம் **அண்ணங்கராசார்ய ஸ்வாமியின்**

# திவ்யப்ரபந்த மஹாநிதியில் (2)

— ஸ்ரீ: —

**163. * ஈ என்னம்மானே யென்னும். *** திருவாய்மொழியில் (10-8-7) * அருளாயீ என்னம்மானே யென்னும் முக்கணம்மானும், தெருள்கொள் பிரமனம்மானும் தேவர்கோனும் தேவரும், இருள்கள் கடியும் முனிவரும் ஏத்துமம்மான் திருமலை, மருள்கள் கடியும் மணிமலை திருமாலிருஞ்சோலை மலையே * என்கிற பாசுரம் திருமாலிருஞ்சோலைமலையின் சிறப்பைக் கூறுவது. சிவன் பிரமன் இந்திரன் முதலான பிரதான தேவர்களும் மற்றுமுள்ள முப்பத்துமூவரமரர்களும் முனிவரும் வந்து 'என்னம்மானே! அருளை ஈ' என்று சொல்லி இறைஞ்சி யேத்துகின்றார்களாம். இதில் (ஈ) என்பது வினைமுற்று; ஈதல் — கொடுத்தல், கொடுக்கவேணும் என்றபடி. அருள்செய்யவேணுமென்கை. * திருமாலிருஞ்சோலையானேயாகி * என்கிற கீழ்ப்பாசுரம் "அருளையீந்தவம்மானே" என்று தலைக்கட்டுதலால் இப்பாட்டின் தொடக்கத்தை "அருளையீந்தவம்மானே யென்னும்" என்பதாக மயங்கிப் பலர் ஸேவிப்பதுண்டு; அது பாடமன்று என்று தெளிக. ... ... *

**164. ஈங்கிவள் தன் நிறையோவினி.** திருவிருத்தத்தில் (62) * இறையோ விரக்கினுமீங்கோர் பெண்பாலெனவுமிரங்காது, அறையோவென நின்றதிருங்கருங்கடல், ஈங்கிவள் தன் நிறையோவினியுன் திருவருளாலன்றிக் காப்பரிதால் முறையோ அரவணைமேல் பள்ளிகொண்ட முகில் வண்ணனே! * என்னும் பாசுரத்தில் தெரிவிக்க வேண்டிய விஷயம் பெரிதுமுண்டு. ஆசார்ய ஹ்ருதயத்தில் "ருக்கு ஸாமத்தாலே ஸரஸமாய் ஸ்தோபத்தாலே பரம்புமா போலே சொல்லார் தொடையல் இசை கூட்ட அமர்சுவையாயிரமாயிற்று." என்றருளிச் செய்தபடி திருவிருத்தத்தில் ஒவ்வொரு பாசுரமும் திருவாய்மொழியில் ஒவ்வொரு பதிகமாக வடிவெடுத்ததென்பர்கள் ஸம்பிரதாயத் தலைவர்கள். அதன்படி * இறையோவிரக்கினுமென்கிற இந்தத் திருவிருத்தப் பாசுரம் திருவாய்மொழியில் (7-2.) * கங்குலும் பகலுமென்கிற பதிகமாகப் பரம்பியுள்ளது. இப்பாசுரத்தில் சுருங்கியுள்ள கருத்தை அப்பதிகம் பரக்கப் பேசிற்று என்றவாறு. இப்பாசுரமும் அப்பதிகமும் தாய் பாசுரமாக அமைந்துள்ளது. ஆசார்ய ஹ்ருதயத்திலேயே (4-7.) "கோயில் திருவாசலிலே முறைகெட்ட கேள்வியாக்கி" என்றருளிச் செய்ததும் இதனை வற்புறுத்தும். **முறையோ!** என்று சொல்லி முறையிட்டது (திருவிருத்தத்தில்) இந்தப் பாசுரத்திலன்றேயுள்ளது. இதன்மேல் ஒன்று தெரிவிக்கலாகிறது. * வான் திகழுஞ் சோலை மதிளரங்கர் வண்புகழ்மேல், ஆன்ற தமிழ்மறைகளாயிரமும் * என்று பட்டரருளிச்செய்த திருவாய்மொழித் தனியனில் திருவாய்மொழியாயிரமும் ஸ்ரீ ரங்கநாதன் விஷயமென்று கூறப்பட்டுள்ளது. இது பொருந்துமோ? திருவாய்மொழியில் * கங்குலும் பகலும் * என்கிற பதிகமொன்றே மதிளரங்கர் விஷயமாகவுள்ளது. திருவேங்கடத்தைப்பற்றி இரண்டு பதிகங்கள்; அடிக்கடி

யும் திருவேங்கடப்ரஸ்தாவமுள்ளது. மற்றும்பல திருப்பதிகளும் அநுபவிக்கப் பட்டுள்ளன. அப்படியிருக்க * மதிளரங்கர் வண்புகழ்மேல் ஆன்ற தமிழ்மறைகளாயிரமும் * என்று எங்ஙனே சொல்லலாம்? என்று சங்கிக்க இடமுள்ளது. இதற்குச் சொல்லுகிறோம் கேண்மின்; * கங்குலும் பகலும் பதிகத்தின் நிகமனப் பாசுரத்தில் * முகில்வண்ணனடிமேல் சொன்ன சொல்மாலையாயிரம் * என்றுராழ்வார். இந்த முகில்வண்ணன் யாவனென்று பார்க்கவேணும். இப்பதிகத்திற்கு மூலமாகக் காட்டப்பட்ட திருவிருத்தப்பாசுரத்தில் "அரவணைமேல் பள்ளிகொண்ட முகில்வண்ணனே!" என்றருளிச் செய்திருப்பதால் அரங்கத்தரவணைப் பள்ளியானே முகில் வண்ணனென்பது தேறும். ஆயிரம் பாசுரங்களையும் ஸ்ரீரங்கநாதனுக்கென்று ஸமர்ப்பித்து அதிலிருந்து மற்றைத் திருப்பதியெம்பெருமான்களுக்குப் பதிகம் பகுத்துக் கொடுத்தருளினாராழ்வார் என்பர் பெரியோர். 'திருவேங்கடத்துக்கிவை பத்தும்' 'திருமோகூர்க்கு ஈத்த பத்திவை' 'ஆயிரத்துள்ளிவைபத்தும் திருமாலிருஞ்சோலை மலைக்கே' என்னபோன்ற பாசுரங்களினால் இதன் பொருத்தம் நன்கு விளங்கும். ... *

165. * ஈங்கோர்பெண்பால் பொருளோவெனுமிகழ்வோ * : — திருவிருத்தத்தில் (33) "அருளார் திருச்சக்கரத்தால் அகல்விசும்பும் நிலனும் இருளார் வினைகெடச் செங்கோல் நடாவுதிர் ஈங்கோர் பெண்பால் பொருளோவெனுமிகழ்வோ இவற்றின் புறத்தாளென்றெண்ணோ தெருளோ மரவணையீர் இவள் மாமை சிதைக்கின்றதே" என்பது பாசுரம். முதற் பிரபந்தமாகிய திருவிருத்தம் பெரும்பாலும் பெண் பாசுரமாகச் செல்கின்றது. பெண்பாசுரமென்பதை வார்த்தைப் போக்கினால் தெரிந்துகொள்ளும்படி வைப்பது தவிர, தமது திருவாக்காலேயே 'பெண்' என்று குறிப்பிடுவது சிற்சிலவிடங்களில் காண்பதாம். திருவாய்மொழியில் (4-2-9) 'நங்கைமீர் நீரும் ஓர் பெண் பெற்று நல்கினீர் எங்ஙனே சொல்லுகேன் யான் பெற்ற வேழையை' என்கிற புடையிலே சில பாசுரங்களைக் காண்கிறோம். அதுபோலவே திருவிருத்தத்தில் 'பெண் தூது செல்லா அன்னன்ன நீர்மை கொலோ' (29) என்கிற பாசுரத்தாலும் 'ஈங்கோர் பெண்பால் பொருளோ வெனு மிகழ்வோ' என்கிற இந்தப் பாசுரத்தாலும் காட்டியருளுகிறபடி. இதனால் ஆழ்வார் தம்முடைய பெண்மையை ஸ்தாபித்துக் கொண்டாராயிற்று. ஆண்பிள்ளையான தாம் பெண்பிள்ளையாகப் பேசுவதன் கருத்து யாதெனில் தம்முடைய அத்யந்த பாரதந்த்ரியத்தைக் காட்டினபடியொழிய வேறில்லை. நிரங்குச ஸ்வதந்த்ரனான பரமபுருஷன் முன்னிலையில் 'ஸ்த்ரீப்ராயம் இதரம் ஜகத்' என்கிறபடியே உலகம் முழுவதும் பெண் தன்மையதாகக் கொள்ளக்கடவது. பெண்டிர்க்கு எப்படி ஸ்வாதந்த்ர்ய கந்தமுமில்லையோ அப்படியே தொண்டு பூண்டமுதமுண்பாரெல்லார்க்கும் ஸ்வாதந்த்ர்ய லேசமு மின்றிக்கே பாரதந்த்ர்யமே வடிவாயிருக்குமென்பது தெரிவிக்கப்பட்டதாயிற்று. ... ... ... ***

166. * ஈரிலை வன்ற சிலைகொண்ட செங்கண்மால் * : — திருமழிசைப் பிரானுடைய நான்முகன் திருவந்தாதியில் (பா. 8) குறித்த வரலாறு வருமாறு:

முன்னொரு காலத்தில் தேவசில்பியான விச்வகர்மாவினால் நிருமிக்கப் பட்ட சிறந்த இரண்டு விற்களுள் ஒன்றைச் சிவபிரானும் மற்றொன்றைத் திருமாலும் எடுத்துக் கொண்டார்கள். பின்பு ஒரு காலத்தில் அவ்விற்களுள் சிறந்தது இன்னதென்பதை அறிய விரும்பிய தேவர்களின் வேண்டுகோளால் பிரமன் அரனுக்கும் அரிக்கும் போரை மூட்டிவிட, அங்ஙனமே அவர்கள் அவ்

விற்களைக் கொண்டு போர் புரிகையில் சிவபிரானது வில் சிறிது முறிபட்டது. அவ்வாறு இற்ற வில்லைச் சிவபிரான் ஜநக குலத்துத் தேவராதனென்னும் அரசனிடம் கொடுத்திட, அது வம்ச பரம்பரையாய் ஜநக மஹாராஜனளவும் வந்தது. இது நிற்க: இருத வலிய வில்லை விஷ்ணு ரிசீகமுனிவனிடம் கொடுத்துச் செல்ல, அது அவன் குமாரனான ஜமதக்னியிடத்தும் அவன் குமாரனான பரசுராமனிடத்தும் பரம்பரையாய் வந்தது. முற்கூறிய சிவ தனுஸ்ஸை ஸீதைக்குக் கன்யா சுல்கமாக ஜனகன் வைத்திருந்தான்; இராம பிரான் அந்த வில்லை முறித்துத் தன் பேராற்றலை விளங்கச் செய்து பிராட்டியை மணந்து கொண்டு மிதிலாபுரியினின்றும் புறப்பட்டு அயோத்திக்கு வரும் போது வழியிடையே செருக்கி வந்த பரசுராமனது கையிலிருந்த விஷ்ணு தனுஸ்ஸை வாங்கி எளிதில் வளைத்து நாணேற்றிக் கணை தொடுத்து, இவ் வம்புக்கு இலக்கென்? என்று வினவ, பரசுராமன் அதற்கு இலக்காகத் தனது தபோபலம் முழுவதையுங் கொடுக்க, அவன் க்ஷத்ரிய வம்சத்தைக் கருவறுத்த வனாயிருந்தாலும் வேதவித்தும் தவவிரதம் பூண்டவனுமாய் இருத்தல்பற்றி அவனைக் கொல்லாமல் அவனது தவத்தைக் கவர்ந்த மாத்திரத்தோடு ஸ்ரீராமன் விட்டருளினான் என்ற வரலாறுகள் இதிஹாஸப்பிரஸித்தம். ஆகவே, இப்பாட்டில் "ஈசனை வென்றசிலை" என்றது பரசு ராமன் கையி லிருந்த விஷ்ணுதனுஸ்ஸை. அதனைக் கொண்ட *செங்கண்மால் ஸ்ரீராமபிரான்.

167. ***ஈசன் ஞாலமுண்டுமிழ்ந்த எந்தையேக மூர்த்திக்கே*: —** திரு வாய்மொழியில் (4 - 3 - 2) *பூசும் சாந்தென்னெஞ்சமே புனையும் கண்ணி யெனதுடைய வாசகம் செய்மாலையே வான்பட்டாடையுமஃதே தேசமான வணிகலனும் என் கைகூப்புச் செய்கையே ஈசன் ஞாலமுண்டுமிழ்ந்த எந்தை யேக மூர்த்திக்கே* என்பது பாசுரம். திருவாய்மொழியில் (4 - 3) *கோவை வாயாள்* என்ற பதிகம் மிக விலக்ஷணமானது. எம்பெருமானுடைய திருக் கல்யாண குணங்களில் ப்ரணயித்வம் என்பது ஒரு விலக்ஷணமான திருக் குணம். அதுதன்னைக் காட்டுகின்ற பாசுரங்களில் மிகச் சிறந்தது *பூசுஞ் சாந்தென்னெஞ்சமே* என்பது. ஆழ்வாருடைய திருவுள்ளத்தையே எம்பெருமான் தான் பூசுஞ்சாந்தாகக் கொண்டான் என்றவிதனால் தேறும் பொருள் யாதெனில் ஆழ்வாருடைய திருவுள்ளம் ஞானபக்தி விரக்திகளால் நறுமணங் கமழ்கின்றபடியை எம்பெருமான் உகந்து கூறினான் என்கை. தம்முடைய திருவாய்மொழியே அவனுக்குப் பூமாலையாயிற்றென்பதன் கருத் தாவது: — பூமாலைகள் அணிந்து கொள்வதனால் உண்டாகும் போக்யதை திருவாய்மொழியினால் உண்டாயிற்றென்கை. அத்திருவாய்மொழியையே பீதாம்பரமாகக் கொண்டான் என்பதன் கருத்தும் அதுவே. ஆழ்வார் ஒரு அஞ்ஜலி பண்ணினால் எம்பெருமான் தான் ஸர்வாபரண பூஷிதனானால் உண் டாகும் உகப்பையடைகிறானென்கை. இங்ஙனே எம்பெருமான் கொள்வது தன்னுடைய ப்ரணயித்வ குணத்தினாலென்க. ... * *

168. ***ஈசன் வானவர்க்கென்பன் என்றால் அது தேசமோ!*** திரு வாய்மொழி மூன்றாம் பத்தில் *ஒழிவில் காலப்பதிகத்தில் நாலாம்பாட்டு "ஈசன் வானவர்க் கென்பனென்றால் அது தேசமோ திருவேங்கடத்தானுக்கு? நீசனேன் நிறைவொன்றுமிலேன் என் கண் பாசம் வைத்த பரஞ்சுடர்ச் சோதிக்கே" என்பது. இப்பாசுரம் அநுபவ ரஸிகர்களுக்குப் பரமபோக்யமானது. இதன் கருத்தைக் கேளீர். "எண்ணில் தொல்புகழ் வானவரீசன்" என்றார்

கீழ்ப்பாட்டில். அதனால் நித்யஸூரிகளுக்குத் தன்னை அநுபவிக்கக் கொடுத்தானென்பதை ஓரேற்றமாக அருளிச்செய்தார்; மிகவும் நீசனான என் பக்கலிலே பாசம் வைத்திருக்கும்அப்பெருமானுக்கு அது ஓர் ஏற்றமோ என்கிறார் இப்பாட்டில். "வானவர்க்கு ஈசன்" என்று சொல்லுகிறது திருவேங்கடத்தானுக்குத் தேசமோ? என்கிறார். கானமும் வானரமும் வேடுமான விவற்றுக்கு முகங் கொடுத்துக் கொண்டு நிற்கிறவன் நித்ய ஸூரிகட்கு முகங்கொடுக்கிறானென்பது எங்ஙனே ஏற்றமாகும்? அயர்வறுமமரர்களதிபதி என்கை ஸ்ரீ வைகுண்டநாதனுக்கு ஏற்றமாகுமத்தனை யல்லது திருவேங்கடமுடையானுக்கு ஏற்றமாகாது காணும். அஃது ஏற்றமன்றாகில், பின்னை எதைத் திருவேங்கடமுடையானுக்கு ஏற்றமாக நீர் நினைக்கிறீர்? என்ன; அதற்கு விடையளிக்கின்றார் போலும் பின்னடிகளால். அமர்யாத: க்ஷுத்ர: சலமதி: அஸூயாப்ரஸவபூ:" இத்யாதிப்படிகளிலே ஆளவந்தார் போல்வார் அருளிச்செய்கிற கணக்கிலே மிகவும் நிஹீனனான என் திறத்தில் ஆசாபாசம் வைத்து அதனால் புகர் படைத்திருக்கின்ற எம்பெருமானை வானவரீசன் என்பது என்ன பெருமை என்றதாயிற்று. ... ... ... *

169. ***ஈசிபோமினிங்கிரேன்மின் :*** — பெரிய திருமொழியில் (1-3-8) வதரி வணங்கும் பதிகத்தில் பாசுரமிது. மூப்பு வந்தெய்துவதற்கு முன்னே வதரி வணங்கவேணும் என்று உபதேசிப்பது இப்பதிகத்தின் ஸாரமான பொருள். மூப்பு வந்தடைந்தால் விஷயாந்தரப்ரவணர்கள் படும் பரிபவங்களையும் இத்திருமொழியில் விநோதமாகப் பேசுகிறார். மேலே (6-4) *கண்ணுஞ் சுழன்று* பதிகம் முழுவதும் இப்பதிகத்தின் சாயலாகவே அமைந்துள்ளது. பகவத்விஷயமல்லது அறியாத ஆழ்வார்க்கு ஸம்ஸாரிகள் இங்ஙனே படும் பரிபவங்கள் எங்ஙனே தெரிய வந்தன? என்று சிலர் கேட்பதுண்டு. ஸ்ரீ விஷ்ணு புராணத்தில் (1-20-19) ப்ரஹ்லாதாழ்வான் நரஸிம்ஹமூர்த்தியிடம் வரம் வேண்டுகையில் "யா ப்ரீதி: அவிவேகாநாம் விஷயேஷு அநபாயிநீ, த்வாமநுஸ்மரதஸ் ஸா மே ஹ்ருதயாந் மாபஸர்ப்பது" என்கிறான். அவிவேகிகளான ஸம்ஸாரிகளுக்கு விஷயாந்தரங்களிலே எப்படிப்பட்ட அன்பு உண்டாகின்றதோ அப்படிப்பட்ட அன்பு எனக்கு உன் பக்கலில் உண்டாக வேணுமென்பது இதன் பொருள். நாலைந்து வயது நிரம்பாத அச்சிறுவனுக்கு விஷயாந்தரங்களிலே ஸம்ஸாரிகளுக்கு உண்டாகும் அன்பின் திறம் எப்படித் தெரிந்தது? என்று கேட்டால் யார் என்ன சொல்ல முடியும்? எம்பெருமானருளால் ஸாக்ஷாத்கரிக்குமவர்கள் பகவத் விஷயத்தோடு ப்ராக்ருத விஷயத்தோடு வாசியற எல்லா விஷயங்களையும் ஸாக்ஷாத்கரிப்பர்கள். (மூலத்தில் 'ஈசி போமின்' என்றது 'சீ! சீ! ஒழிந்துபோ' என்றபடி.) ***

170. ***ஈச்வரனவதரித்துப்பண்ணின ஆனைத் தொழில்களெல்லாம் பாகவதாபசாரம் பொறாமையென்று ஜீயரருளிச்செய்வர்.*** இது ஸ்ரீவசனபூஷண ஸ்ரீஸூக்தி. நஞ்சீயரருளிச் செய்யும் வார்த்தையிது. எம்பெருமான் திருவவதாரம் செய்வதற்குக் காரணங்கள் மூன்று. *பரித்ராணாய ஸாதூநாம் விநாசாய ச துஷ்க்ருதாம், தர்ம ஸம்ஸ்தாபநார்த்தாய ஸம்பவாமி யுகே யுகே.* என்கிற பகவத்கீதா வசனத்தினால் ஸாதுக்களை ரக்ஷித்தல், துஷ்டர்களை சிக்ஷித்தல், அறநெறியை நிலைநாட்டுதல் ஆகிய இம் மூன்று காரியங்களுக்காகத் தான் நிலவுலகில் திருவவதாரம் செய்வதாக எம்பெருமான் தானே பணித்துள்ளான். இம் மூன்றும்

ஸம்ப்ரதானமேயாகிலும் காரணவிசேஷத்தினுல் ஓரொன்றே ப்ரதானமாகக் கொள்ளப்படுவதுண்டு. சாரீரகமீமாம்ஸையில் அந்தரதிகரண ஸ்ரீபாஷ்யத்தில் ஸாதுபரித்ராணமே அவதாரங்கட்கு முக்கியமான உத்தேச்யமென்றருளிச் செய்யப்பட்டது. நஞ்சீயர் துஷ்க்ருத்விநாசத்தையே முக்கியமாகத் திருவுள்ளம் பற்றினுர். ஒன்றுக்கொன்று முரண்பட்டதென்று கருதலாகாது. ... *

**171. *ஈச்வரனை யொழிந்தவர்கள் ரக்ஷகரல்ல ரென்னுமிடம் ப்ரபந்நபரித்ராணத்திலே சொன்னோம்.*** பிள்ளை லோகாசார்யரருளிச்செய்த அஷ்டாதச ரஹஸ்யங்களுள் சரம ரஹஸ்யமான முமுக்ஷுப்படியில் ஸ்ரீஸூக்தியிது. உலகில் சிலர் தந்தை தாயர் முதலான ஆபாஸ பந்துக்களை ரக்ஷகர்களாக நினைத்திருப்பர்கள்; சிலர் அவ்வோ தேவதைகளை ரக்ஷகர்களாக நினைத்திருப்பர்கள். இதெல்லாம் மருள். ஸர்வேச்வரனெருவனே ரக்ஷகனுவன்; அவன் தவிர மற்று ஒருவரும் ரக்ஷகரல்லர், பக்ஷகரே யாவர்—என்கிற உறுதி ப்ரபன்னர்களுக்கு இருக்கவேணும். ஸகல சாஸ்த்ரங்களும் முறையிடுவது இதுவேயாகும். இதனை விவரித்துப் பிள்ளையுலகாசிரியர் ப்ரபந்நபரித்ராணம் என்றொரு ரஹஸ்யமருளிச் செய்துள்ளார். அதிலே கண்டு கொள்வது. ... ... ... ... ... *

**172. * ஈடுமுப்பத்தாறுயிரம் *:** —உபதேச ரத்தினமாலையில் பாசுரம் ''தெள்ளியதா நம்பிள்ளை செப்புநெறி தன்னை, வள்ளல்வடக்குத் திருவீதிப் பிள்ளை, இந்த நாடறிய மாறன் மறைப்பொருளை நன்குரைத்தது ஈடுமுப்பத்தாறுயிரம்.'' — ஆளவந்தார் திருவுள்ளத்தில் குடிகொண்டிருந்த குறைகளில் ப்ரஹ்மஸூத்ரத்திற்கு பாஷ்யம் அவதரிக்க வேணுமென்பதும் திருவாய்மொழிக்கு வ்யாக்யானம் அவதரிக்க வேணுமென்பதும் முக்கியமாக இருந்தன. அக்குறைகளைத் தீர்க்கக் கருதின எம்பெருமானுர் ப்ரஹ்மஸூத்ரத்திற்கு ஸ்ரீபாஷ்யம் அருளிச்செய்தார். திருவாய்மொழிக்கும் தாமே அங்ஙனே வ்யாக்யானமிட்டருளலாம், ஆனுல் தாம் இட்டருளவில்லை. தம்முடைய புத்ரப்ராயரும் அந்தேவாஸியுமான திருக்குருகைப்பிரான் பிள்ளானுக்கு நியமித்தருளி ஸம்க்ஷேபமான வ்யாக்யானமொன்றை அவதரிப்பித்தருளினுர். அதனை மணவாள மாமுனிகள் *தெள்ளாரும் ஞானத்திருக் குருகைப்பிரான் பிள்ளான், எதிராசர் பேரருளால் உள்ளாரு மன்புடனே மாறன்மறைப்பொருளை யன்றுரைத்தது, இன்பமிகு மாறுயிரம்* என்கிற பாசுரத்தினுல் தெரிவித்தருளினுர். திருவாய்மொழியானது ப்ரஹ்மஸூத்ரம் போலன்றிக்கே பகவத்குணநுபவ க்ரந்தமாகையாலே இதற்குப் பல வ்யாக்யானங்கள் அவதரிக்க வேணுமென்றும், தாம் ஒரு வ்யாக்யானம் இட்டருளினுல் பிறகு யாரும் வ்யாக்யானமிட முன் வாரார்கள் என்றும் திருவுள்ளம்பற்றிப் பிள்ளானைக் கொண்டு எழுதுவித்தார். திருவாய்மொழியில் (6–5) தோழி பாசுரமான * துவளில் மாமணி மாடப்பதிகத்தில் ''உரைகொள் இன் மொழியாள்'' என்று ஆழ்வார் குறிப்பிடப்பெற்றுள்ளார். இது தோழி பாசுரமெனினும் ஆழ்வார் தாமாக அருளிச் செய்த பாசுரந்தானே! அதில் ஆழ்வார் தம்மை 'உரைகொளின் மொழியாள்' என்றதனுல் பல்லுரைகளைக் கொள்ளும் வாய்மொழியையுடையவள் பராங்குசநாயகி என்பது ஸூசிதமாயிற்று. அதையும் திருவுள்ளம்பற்றின எம்பெருமானுர் மேலே பல பல வ்யாக்யானங்கள் திருவாய்மொழிக்கு அவதரிக்க வேணுமென்று திருவுள்ளம் பற்றியிருந்தார். அப்படி அவதரித்த வ்யாக்யானங்களில் எதிராசர் பேரருளால் பிள்ளானிட்டது [illegible]

ஒன்பதினாயிரம். * நம்பிள்ளை தம்முடைய நல்லருளாலே ஏவி விடப் பெரியவாச்சான்பிள்ளை யிட்டது இருபத்து நாலாயிரம். * நம்பிள்ளை செப்புநெறி தன்னை வடக்குத் திருவீதிப்பிள்ளை இட்டது ஈடுமுப்பத்தாறாயிரம். இதற்குப் பிறகு அழகிய மணவாளச்சீயர் உரைத்தது பன்னீராயிரம். இவற்றுள் தலைசிறந்து விளங்குமது ஈடுமுப்பத்தாறாயிரம். இந்த வியாக்கியானத்தின் வரலாற்றை மணவாள மாமுனிகள் உபதேசரத்தினமாலையில் * சீரார் வடக்குத் திருவீதிப்பிள்ளை, எழுதேரார் தமிழ்வேதத் தீடுதனைத் — தாருமென வாங்கி முன்னம்பிள்ளை ஈயுண்ணிமாதவர்க்குத்தாம் கொடுத்தார், பின்னதனைத்தான். * ஆங்கவர்பால் பெற்ற சிறியாழ்வானப்பிள்ளை, தாம் கொடுத்தார் தம்மகனார் தங்கையில் — பாங்குடனே, நாலூர் பிள்ளைக் கவர்தாம் நல்ல மகனார்க்கவர்தாம், மேலோர்க்கீந்தாரவரேமிக்கு * என்கிற இரண்டு பாசுரங்களினாலருளிச் செய்தார். [ ஈயுண்ணிமாதவப் பெருமாளென்பவரும் சிறியாழ்வானப்பிள்ளை யென்பவரும் ஒருவ்யக்தியே யென்றுணர்க.] ... *

173. * **ஈடுமெடுப்புமிலீசன்** * (திருவாய்மொழி 1-6-3.) உபேக்ஷித்தலும் அபேக்ஷித்தலுமில்லாதவன் எம்பெருமான் என்றபடி. ‘இவர்கள் அறிவில்லாதவர்கள், இவர்கள் ஒழுக்கமில்லாதவர்கள்’ என்று சிலரைத் தள்ளிவிடுதலும், ‘இவர்கள் நற்குணத்தவர்கள்’ என்று சிலரை ஆதரித்துக்கொள்ளுதலுமில்லாதவன் என்றபடி. * தேவாநாம் தாநவாநாஞ்ச ஸாமாந்யமதிதைவதம் * என்று ஜிதந்தாஸ்தோத்ரத்தில் கூறியுள்ளபடியே அனைவர்க்கும் பொதுவான தெய்வமென்க. அமரர்கட்கும் அரக்கரசுரர்கட்கும் பொதுவான தெய்வமாகில் * அமரர்க்கிடர்கெட அசுரர்கட்கிடர் செய் * என்பது போன்ற பாசுரங்கள் அவதரித்தபடி என்னென்னில்; விளக்கிலே விட்டில்கள் தாமாக வந்து விழுந்து மாள்வதும், கழுத்திலே கல்லைக் கட்டிக்கொண்டு தடாகத்திலே தாமாக விழுந்து மாள்வதும் போல அரக்கர்களும் அசுரர்களும் தாமாக எதிரிட்டு மாண்டுபோமளவில் எம்பெருமானுடைய குற்றமென்னோ? பகவத்கீதையில் எம்பெருமான் தானே சோதிவாய் திறந்து பணித்ததுங் காணீர் — * ஸமோஹம் ஸர்வபூதேஷு ந மே த்வேஷ்யோஸ்தி ந ப்ரிய: * என்று.

174. * **ஈடும் வலியுமுடைய இந்நம்பி பிறந்த எழுதிங்களில்** * (பெரியதிருமொழி 10-7-9.) இப்பாசுரத்தில் யசோதைப் பிராட்டி கண்ணபிரான் செய்த சகடபங்கத்தை அற்புதமாகக் கூறுகின்றாள். கண்ணன் பிறந்த ஏழாவது மாதத்தில் சகடபங்கம் நடந்ததாகக் கூறுகின்றாள். பெரியாழ்வார் திருமொழியில் (3-1-2) யசோதைப் பிராட்டி பாசுரமான *பொன்போல்மஞ்சனமாட்டி அமுதூட்டிப் போனேன் வருமளவிப்பால், வன்பாரச் சகட மிறச்சாடி, வடக்கிலகம்புக்கிருந்து, மின்போல் நுண்ணிடையாளொரு கன்னியை வேற்றுருவஞ் செய்து வைத்த அம்பா! உன்னையறிந்து கொண்டேன் உனக்கஞ்சுவன் அம்மம் தரவே* என்கிற பாட்டில் ஒரு ஜாரக்ருத்யம் சொல்லப்படுகிறது; ஏழாவது வயதிலும் ஸம்பாவிதமல்லாதன்று ஏழாவது மாதத்தில் ஸம்பாவிதமாமோ? என்று சிலர் கேட்பதுண்டு; (ஸமாதானம்.) ஆழ்வார்களநுபவிக்கும் க்ருஷ்ண சேஷ்டிதங்களில் பௌர்வாபர்யம் (அடைவு) விவக்ஷிதமன்று. * வரிந்திட்ட வில்லால் மராமரமேழுமெய்து, மலைபோலுருவத்தொரிராக்கதிமூக்கரிந்திட்டவன் * (பெரியதிருமொழி 10-6-9) என்கிறார். மராமரமேழுமெய்ததனை கிஷ்கிந்தா காண்டத்தில்; இராக்கதிமூக்கரிந்தது ஆரண்ய காண்டத்தில். இங்ஙனே பல பல. சரித்ராநுபவம் மட்டுமே விவக்ஷிதம். ... ... ... *

175. ***ஈட்டங்கண்டிடக்கூடுமேல் அது காணுங்கண் பயனாவதே*** (பெருமாள் திருமொழி 2-1.) ஈட்டமாவது கூட்டம். ஜனக்கூட்டங்களை எங்கும் காணலாம். அந்தக் காட்சியை ஆழ்வார் ஆசைப்படுகின்றிலர்; *மெய்யடியார்கள் தம் ஈட்டங்கண்டிடக்கூடுமேல்* என்று துர்லபமானதற்கு ஆசைப்படுகிறார். கண்டால் போதுமோவென்னில்; [அதர்சநே தர்சநமாத்ரகாமா:] காணப்பெறுதவளவில் காண்கையில் ஆசை. கண்டுவிட்டால் *அணியரங்கன் திருமுற்றத்தடியார்தங்கள் இன்பமிகு பெருங்குழுவு கண்டு யானுமிசைந்துடனே யென்று கொலோவிருக்குநாளே.* என்று—ஒரு நொடியும் விட்டுப்பிரியாதே என்றும் கூடியேயிருக்க ஆசை. *இங்கே காண இப்பிறப்பே மகிழ்வர் எல்லியுங் காலையே* என்று திருவாய்மொழியில் (8-5-11.) கூறின மகிழ்ச்சி இதுவேயன்றோ. கூரத்தாழ்வான் (வைகுண்டஸ்தவே) *கைங்கர்ய நித்யநிரதை: பவதேக போகை: நித்யை: அநுக்ஷண நவீநரஸார்த்ரபாவை:, நித்யாபிவாஞ்சித பரஸ்பர நீசபாவை: மத்தைவதை: பரிஜநைஸ் தவ ஸங்கஸீய* என்றது *வானத்திமையவர் சூழவிருக்கும் பேரின்பவெள்ளத்திலாசையாலே. இங்குச் சொன்னது அதுவன்று. இந்நிலத்திலேயாம். ... ... *



176. *** ஈட்டங்கொள் தேவர்கள் சென்றிரந்தார்க்கிடர் நீக்கிய *** திருவாய்மொழியில் (7-5-6.) *மாவலிவாதிக்கவாதிப்புண்டு, ஈட்டங்கொள் தேவர்கள் சென்றிரந்தார்க்கு இடர்நீக்கிய* என்கிற பாசுரத்தினாலும், *வேண்டித்தேவரிரக்கவந்து பிறந்ததும்.* (6-4-5.) என்கிற பாசுரத்தினாலும், *ஸ ஹி தேவை ருதீர்ணஸ்ய ராவணஸ்ய வதார்த்திபி:, அர்த்திதோ மாநுஷே லோகே ஜஜ்ஞே விஷ்ணுஸ் ஸநாதந:* என்கிற ஸ்ரீராமாயண சுலோகத்தினாலும் தேவர்களின் வேண்டுகோளினால் எம்பெருமான் திருவவதாரங்கள் செய்தருளினதாகத் தெரியவந்தாலும் இந்த வேண்டுகோள் வியாஜமாத்திரமேயன்றி அவனுடைய ஸங்கல்பமே முக்கியமான ஹேதுவாகும். கீதையில் *அஜோபி ஸந் அவ்யயாத்மா பூதாநாம் ஈச்வரோபி ஸந், ப்ரக்ருதிம் ஸ்வாமதிஷ்டாய ஸம்பவாமி ஆத்மமாயயா* என்ற சுலோகத்தில் (ஆத்மமாயயா) என்றதற்கு சங்கராசாரியர் செய்த பொருள் வேறு. ஸ்வாமி எம்பெருமானாரருளிச் செய்த பொருள் ஸங்கல்பத்தாலே யென்பதாம். ஸ்ரீவிஷ்ணு புராணத்தில் பராசர பகவான் *இச்சாக்ருஹீதாபிமத—உருதேஹ:* என்று பணித்ததுங் காண்க. ... ... ... *



177. *** ஈட்டிய வெண்ணெய் தொடுவுண்ணப் போந்து *** (திருவிருத்தம் 21) ஆசார்யஹ்ருதயத்தில் "முந்நீர்வாழ்ந்தார் சூட்டுங் கோவையாழி யென்கிற ஸாக்ஷாத்க்ருத ஸ்வைரவ்ருத்தாந்தர்க்கு" என்றருளிச் செய்கிறார். திருப்புளியாழ்வாரடியின் கீழிருந்துகொண்டே யாழ்வார் பரமபதச் செய்தியொன்றை ஸாக்ஷாத்கரித்துப் பேசியுள்ளார் *சூட்டு நன்மாலைகள் பாசுரத்தில். (இப்பாட்டின் கருத்தாவது —) "பரமபதத்திலே நித்யஸூரிகள் திருவாராதநம் ஸமர்ப்பிக்கவிருக்கும் நிலைமையிலே ஸ்நாநாஸநமும் அலங்காராஸநமும் ஸமர்ப்பித்து [ அதாவது, திருமஞ்சனம் ஸமர்ப்பித்துத் திருமாலை சாத்தி]த் தூபம் ஸமர்ப்பிக்குமளவில் அப்புகையினால் திருமுக மண்டலம் மறையுமே, அந்த அவஸரத்தில் வெண்ணெயமுதை நினைத்துத் திருவாய்ப்பாடியிலெழுந்தருளி நப்பின்னைப் பிராட்டிக்காக எருதுகளையடர்த்து அவளை மணந்து கொண்டு, திருநாட்டில் தீபம் ஸமர்ப்பிக்கையில் சென்று நின்று திருமுக மண்டலத்தைக் காட்டினனாம்." இதை ஆழ்வார் கண்டறிந்தனர். *

178. * ஈதேயானுன்னைக் கொள்வது * திருவாய்மொழியில் (2-9-2) * ஈதேயானுன்னைக் கொள்வதெஞ்ஞான்றும் * என்று தொடங்கி * ஞானக் கைதா காலக்கழிவு செய்யேலே * என்று தலைக்கட்டுகிறார். உலகத்தில் ஒருவர் ஒருவரிடத்திலே உதவி வேண்டும்போது ''இச்சமயம் கிருபை பண்ணிக் கைகொடுக்கவேணும்'' என்பர். அதற்கு ஸந்தர்ப்பத்திற்கு ஏற்றபடி அர்த்த மாகும். பெரும்பாலும் பொருந்தவையையே பொருளாகக் கொள்ள வேண்டி யிருக்கும். இங்கு ஆழ்வார் அப்பொருள் தோன்றுமைக்காக * ஞானக்கைதா * என்று ஸ்பஷ்டமாக அருளிச் செய்தாராயிற்று. இவ்விடத்து ஈடுமுப்பத்தாரு யிரத்தில் ஓர் இன்சுவைமிக்க ஐதிஹ்யம் காட்டப்பட்டுள்ளது. (அதாவது) — முதலியாண்டான் ஒருகால் திருநாராயணபுரத்தில் எழுந்தருளியிருக்கையில் அவருடைய சிஷ்யரான ஒரு ஸ்ரீவைஷ்ணவர் கோயிலிலே (ஸ்ரீரங்கத்திலே) வந்து எம்பார் ஸந்நிதியிலே கைங்கர்யம் பண்ணிக்கொண்டிருந்தார். அப்போது ஒரு நாள் சில ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு எம்பார் திருவிலச்சினை ஸாதிக்கவிருக்கையில் இந்த ஸ்ரீவைஷ்ணவர் தமக்கும் ஸாதிக்கும்படி வேண்டினார். அப்போது எம்பார் ''உமக்கு விசேஷ ஸம்பந்தமுண்டோ ?'' என்று அவரைக் கேட்க 'தேவரீருடைய ஸம்பந்தமே ஸம்பந்தம்' என்று அவர் விண்ணப்பஞ் செய்ய, அவ்வளவிலே எம்பார் 'இவர் முதலியாண்டானுடைய ஸ்ரீபாதத்தவர்' என்றறியாதே இவர்க்குப் பஞ்ச ஸம்ஸ்காரங்களைப் பண்ணி இவரைக் கொண்டு கைங்கரியங்களுங் கொண்டெழுந்தருளியிரா நிற்கையில் ஆண்டானும் திரும்பிக் கோயிலிலே எழுந்தருள, அப்போது அந்த ஸ்ரீவைஷ்ணவர் ஆண்டானை வந்து ஸேவிக்க, ஆண்டானும் முன்பு போல இவரைக்கொண்டு வேண்டும் கைங்கரியங்களைக் கொள்ள, அப்போது எம்பார் அறிந்து ஆண்டான் பக்கலிலே யெழுந்தருளி 'கனக்க அபசாரப் பட்டேன்' என்றருளிச்செய்ய, இவருடைய திருவுள்ளத்தில் க்லேசத்தை யறிந்து அப்போது ஆண்டானருளிச் செய்த வார்த்தை — 'ஒரு கிணற்றிலே விழுந்தவனுக்கு இரண்டுபேர் கைகொடுத்தால் எடுக்குமவர்களுக்கும் எளிதாய் ஏறுமவனுக்கும் எளிதாயிருக்குமிறே; அப்படியேயாகிறது' என்றும். இங்குக் கைகொடுப்பதாவது ஞானோபதேசம் செய்வதாம். குருமுகமாக விரிவு உணர்க.

179. * ஈபாவஞ்செய்தருளாலளிப்பாரார்! * திருவாய்மொழியில் (2-2-2) * ஏபாவம் பரமே! ஏழுலகும், ஈபாவஞ்செய்து அருளாலளிப்பாரார் ? என்கிறாழ்வார். ஈபாவஞ்செய்து = பாவம் ஈயச் செய்து, பாவம் தொலைந்ததாகச் செய்து என்றபடி. ஆழ்வான் ஸ்ரீவைகுண்டஸ்தவத்தில் * யத்ப்ரஹ்ம கல்ப நியுதாநுபவேப்யநாச்யம் தத் கில்பிஷம் ஸ்ருஜதி ஜந்துரிஹ க்ஷணார்த்தே * என்றருளிச் செய்கிறார். அதாவது அநேக கல்ப காலங்கள் அநுபவித்துத் தொலைக்க வேண்டிய பாவங்களை அரைநொடியில் சேதனன் செய்கின்றான் என்றவாறு. மஹாதேவனுடைய மாபாவங்களைப் போக்கின மஹாவிஷ்ணுவை யொழிய நம்முடைய பாவங்கள் வேறொருவரால் போக்கவரிதென்றபடி. * * *

180. * ஈயத்தாலாகாதோ இரும்பினாலாகாதோ ? * = திருமங்கையாழ்வார் சரிதையில் காண்பதொரு இதிஹாஸம் ப்ரஸித்தமானது, நாகைப் பட்டினத்தில் ஸ்வர்ணமயமானதொரு பௌத்த விக்ரஹத்தைப் பெயர்த்துக் கொண்டு வந்து திருவரங்கம் பெரிய கோயிலில் திருப்பணிகளுக்கு உபயோகப் படுத்திக்கொண்டதாக. அப்போது அந்த பிம்பத்தினெதிரே திருமங்கையாழ்வார் ஒரு பாடல் கூறினராம்; (அதாவது) *ஈயத்தாலாகாதோ இரும்பினு

லாகாதோ ? பூயத்தால் மிக்கதொரு பூதத்தாலாகாதோ ?.........மாயப்பொன் வேணுமோ மதித்துன்னைப்பண்ணுகைக்கே.* என்பதாம். இந்த சரித்திரம் நம்பத்தகுந்ததன்றென்று இக்காலத்து ஆராய்ச்சியாளர் கூறுவர்; இது ஸாஹஸமான பேச்சு. ஏறக்குறைய ஆயிரமாண்டுகட்கு முன்னிருந்த பட்டர் [கூரத்தாழ்வான் திருக்குமாரர்] ஸ்ரீரங்கராஜஸ்தவ—பூர்வசதகத்தில் ( 36. ) *ஜிதபாஹ்யஜிநாதிமணிப்ரதிமா அபி வைதிகயந்நிவ ரங்கபுரே, மணிமண்டப வப்ரகணாந் விததே பரகாலகவி: ப்ரணமேமஹி தாந்.* என்றருளிச் செய்திருக்கும் சுலோகரத்னம் பேர்க்கவும் பேராத ப்ரமாணமாகும். ... *

181. ***ஈராவதனையிடர் கடிந்தானெம்பெருமான்***. சிறிய திருமடலில் "நும்மகளை நோய்செய்தான் ஆரானுமல்லனறிந்தேனவனை நான் ... உமக் கறியக் கூறுகேனே* என்று தொடங்கிக் கட்டுவிச்சி சொல்லி வருகையில் *போரானை பொய்கைவாய்க் கோட்பட்டுநின்றலறி* யித்யாதியால் கஜேந்த்ர மோக்ஷகதையைச் சொல்லிவருகையில் *என வெகுண்டு தீராத சீற்றத்தால் சென்றிரண்டு கூறாக, ஈராவதனையிடர்கடிந்தானெம்பெருமான் * என்றாள். யானைக்கு இடர் செய்த முதலையைத் திருவாழியால் இருபிளவாக்கி யொழித்து யானையின் இடரைக் கடிந்ததாகச் சொல்லுகிறதிங்கு. யானைக்கு என்ன இடர் இருந்தது? என்ன இடர் தீர்க்கப்பட்டது? என்று ஆராயவேண்டும். முதலை பிடுங்கினதாலுண்டான இடர் என்று பலர் நினைப்பர்கள்; உண்மையில் அது இடராகில், அதைத்தீர்க்க எம்பெருமான் திருநாட்டிலிருந்து பதறிப் புள்ளூர்ந்து ஓடிவரவேண்டிய அவசியம் சிறிதுமில்லை; *கருதுமிடம்பொருது வருபவனான திருவாழியை நியமித்தே அது செய்யத்தட்டில்லை. *நாஹம் கலேபரஸ்யாஸ்ய த்ராணார்த்தம் மதுஸூதந, கரஸ்தகமலாந்யேவ பாதயோரர்ப்பிதும் தவ* என்று கஜேந்த்ராழ்வான் உள்ளபடி விண்ணப்பம் செய்திருக்கிறான். என்றேனுமொருநாள் தொலையக்கடவதான இந்தப் பாழுடலுக்காக நான் கரையவில்லை; கையிற் பறித்த பூவைத் திருவடிகளிற் பணிமாறவேணுமென்னுமாசை நிறைவேறப் பெறாமைக்கே வருந்தினேன் என்றானதலால் அவனுக்குக் காட்சி தருவதற்காகவே பெருமாளெழுந்தருளினபடி. ... ... ... *

182. ***ஈரியாயிருப்பாள்***. திருவாய்மொழியில் ஆழ்வார் தமது பெருமையைத் தாய்ப்பேச்சாலும் தோழி பேச்சாலும் வெளியிட்டுக் கொள்வதுண்டு. (6-5) *துவளில் மாமணிமாடப் பதிகத்தில் தோழி பேச்சாலே வெளியிட்டார்; (6-7.) *உண்ணுஞ்சோறு பருகுநீர்ப் பதிகத்தில் தாய்ப்பேச்சாலே வெளியிடுகிறார். (9.) *காரியம் நல்லனகளவைகாணில் என் கண்ணனுக்கென்று ஈரியாயிருப்பாள்* என்பது இன்சுவைமிக்க பாசுரம். இதன் கருத்தாவது — உலகத்தவர்கள் ஏதேனும் நல்ல பொருள்களைக் கண்டால் 'இது நம்முடைய மனைவிக்கு ஏற்றிருக்கும், இது நம்முடைய குழந்தைக்கு ஒத்திருக்கும்' என்று சொல்லிக் காண்பர்கள்; பராங்குச நாயகியோவென்னில், அங்ஙனன்றிக்கே எந்த நல்ல பொருளைக் கண்டாலும் 'இது எம்பெருமானுக்குத் தகுந்திருக்கும், இது என் கண்ணனுக்கு ஏற்றிருக்கும்' என்றே சொல்லுவது வழக்கமாம். அங்ஙனம் சொல்லுமிடத்து நெஞ்சு நெகிழ்ந்திருக்குமிருப்பு வெகு ஆச்சரியமாயிருக்கும். அசோகவனத்திலே பிராட்டியைக் கண்ட திருவடி சொல்லுகிறான் — *த்ருஷ்ட்வா பலம் வா புஷ்பம் வா யத்வாந்யத் ஸுமநோஹரம், பஹுசோ ஹா ப்ரியேத்யேவம் ச்வஸந் த்வாமபிபாஷதே *

என்று. பழமோ பூவோ மற்றும் எது காணப்பெற்றாலும் நம் பிராட்டிக்கு ஆகுமென்றே பெருமாள் காண்பதுபோல, நம் பெருமாளுக்காகுமென்றே இப்பிராட்டி (பராங்குச நாயகி) காண்கிறபடி.

183. * ஈரிரண்டுமுகமுங் கொண்டு * பெருமாள் திருமொழியில் (1-8.) * எம்மாண்பினயன் நான்குநாவினாலுமெடுத் தேத்தி ஈரிரண்டு முகமுங் கொண்டு, எம்மாடுமெழில் கண்களெட்டினோடும் தொழுதேத்தியினிதிறைஞ்ச நின்ற.. ...* என்னும் பாசுரத்தை பட்டர் ஸ்ரீரங்கராஜஸ்தவ உத்தரசதகத்தில் (ச்லோ 76) * ஸர்க்காப்யாஸவிசாலயா நிஜதியா ஜ்ஞாநந் அநந்தே சயம், பாரத்யா ஸஹதர்மசாரரதயா ஸ்வாதீநஸங்கீர்த்தந:, கல்பாதேவ பஹூந் கமண்டலுகளத்கங்காப்லுதோபூஜயத் ப்ரஹ்மா த்வாம் முகலோசநாஞ்ஜலிபுடை : பத்மைரிவாவர்ஜிதை: * என்கிற சுலோகத்தினால் விஸ்தரித்து மொழிபெயர்த்தருளினர்.

184. * ஈரிருபதாஞ்சோழமீரொன்பதாம்பாண்டி * பிள்ளைப்பெருமாளையங்கார் நூற்றெட்டுத் திருப்பதியந்தாதி பாடத் தொடங்குகையில், நூற்றெட்டுத் திருப்பதிகள் இன்னின்ன நாடுகளிலுள்ளனவென்பதைக் காட்டுதற்கு முந்துறமுன்னம் இவ்வெண்பா பாடினர். இப்பாடல் பக்தர்களனைவர்க்கும் கண்டபாடமாயிருக்கவேணும். * ஈரிருபதாஞ்சோழம் ஈரொன்பதாம் பாண்டி, ஓர்பதின்மூன்றும் மலைநாடோரிரண்டாம் — சீர்நடுநாடாறேடு ஈரெட்டுத் தொண்டை அவ்வடநாடாறிரண்டு, கூறு திருநாடொன்றாக் கொள் * என்பது அவ்வெண்பா. திருவரங்கம் பெரியகோயில் முதலிய நாற்பது திவ்ய தேசங்கள் சோழ நாட்டிலுள்ளன. திருமாலிருஞ்சோலை முதலிய பதினெட்டு திவ்ய ஸ்தலங்கள் பாண்டி நாட்டிலுள்ளன. மலை நாட்டில் திருவனந்தபுரம் முதலிய பதின்மூன்று திவ்ய தேசங்கள் ஸேவிக்கத் தக்கன. திருவயிந்திரபுரம் திருக்கோவலூர் ஆகிய இரு தலங்களும் நடுநாட்டிலுள்ளவை. பெருமாள் கோயில் (திருக்கச்சி—அத்திகிரி) முதலிய இருபத்திரண்டு திவ்ய தேசங்கள் தொண்டை நாட்டுத் திருப்பதிகளென்க. திருவேங்கடம், திருவயோத்தி முதலிய பன்னிரண்டு திருப்பதிகள் வடநாட்டுத் திருப்பதிகளாம். இனி திருநாட்டை நூற்றெட்டாவது திருப்பதியாகக்கொள்வர்.

185. * ஈரைந்தும் வல்லவர்க்கு ஏதுமிடரில்லையே. * பெரிய திருமொழி (10-7-14.) * மானமுடைத்துங்களாயர் பதிகம் மட்டும் பதினான்கு பாசுரமாக அமைக்கப்பட்டுள்ளது. ஆழ்வார்களில் பதிகங்கள் பாடினவர்கள் நம்மாழ்வார், குலசேகராழ்வார், பெரியாழ்வார், (ஆண்டாள்) திருமங்கையாழ்வார் ஆகிய இவர்கள். நம்மாழ்வார் நியமேந பதினொரு பாசுரங்களைப் பதிகந்தோறுமிட்டவர் * கேசவன் தமர் பதிகமொன்றில் மட்டும் கேசவாதி த்வாதசநாமங்களை யிட்டுப் பாடினபடியாலே பதின்மூன்று பாசுரங்களைப் பணித்தருளினர். குலசேகராழ்வார் தாம் பாடின பதிகங்கள் பத்தில், பத்துப் பாசுரங்கள் கொண்ட பதிகங்களும் பதினொரு பாசுரங்கள் கொண்ட பதிகங்களும் ஒன்பது பாசுரங் கொண்ட பதிகமொன்றுமாக அமைத்தருளினர். பெரியாழ்வார் 10, 20, 11 பாசுரங்கள் கொண்டனவாகப் பாடினர். * போய்ப்பாடுடைய பதிகமொன்று மட்டும் கேசவாதி நாமங்களையிட்டுப் பாடினதாகையாலே பதின்மூன்று பாசுரமாக அமைந்தது. ஆண்டாள் ஒருநூற்று நாற்பத்துமூன்றுரைத்தாளாகையாலே பத்துப் பாசுரங்கள் கொண்ட பதிகங்கள் பதி

ஞென்றும், பதினொரு பாசுரங்கள் கொண்ட பதிகங்கள் மூன்றுமாக அருளிச் செய்தார். திருமங்கையாழ்வார் 108 பதிகங்களருளிச் செய்தவர். நியமேந பத்துப் பாசுரங்களே கொண்ட பதிகங்கள் பணித்து வருபவர். மேலே குறித்த பதிகமொன்றில் மட்டுமே பதினான்கு பாசுரங்கள் அமைத்தருளினர். இதற்குக் காரண விசேஷமேதுமில்லை. கண்ணபிரானுடைய அதிமாநுஷ சீலவ்ருத்த வேஷங்களை யநுபவித்து வருகையில் தம்மையுமறியாமே பாசுரங்களைப் பெருக விட்டனர் போலும். ... ... ... ... *

186. *** ஈராஞ்ஞூறு தோள்களைத் துணித்த *** திருச்சந்த விருத்தப் பாசுரமிதனில் பாணாஸுரனுடைய தோள்களைக் கண்ணபிரான் துணித்தருளின கதையை அநுஸந்தித்தருளுகிறார் திருமழிசைப்பிரான். இக்கதையைப் பேசுமாழ்வார்கள் அனைவரும் வாணனுடைய ஆயிரந் தோள்களையும் துணித்ததாகவே பேசிவருகின்றார்கள். நம்மாழ்வார் * வாணபுரம்புக்கு முக்கட்பிரானைத் தொலைய வெம்போர்கள் செய்து, வாணனை யாயிரந்தோள் துணித்தான் * என்றார். பெரியாழ்வார் * மாயப்பொருபடை வாணனை யாயிரந் தோளும் பொழிகுருதிபாயச் சுழற்றிய ஆழிவல்லான் * என்றார். இங்ஙனே பலவுங்காணலாம்: வரலாறு கூறுகின்ற மஹர்ஷிகள் பரமசிவனது ப்ரார்த்தனைக்கிணங்க நான்கு தோள்களைத் துணிக்காமல் நிறுத்தி உயிர்ப்பிச்சை யளித்துவிட்டதாகக் கூறுகின்றனர். ஸுதர்சந சதகத்தில் * நந்திந்யா நந்த சூந்யே * என்கிற சுலோகத்தில் * யோ தத்தாவாதிபிக்ஷோ: பிக்ஷாம் தத்ப்ராண ரூபாம் * என்று உயிர்ப்பிச்சை யளித்தது மட்டும் கூறப்பட்டது. நான்கு தோள்களை யறுக்காமல் நிறுத்தியது உண்மையே. ஆயினும் ஆழ்வார்கள் ஆயிரங் கரங்களையுங் கழித்ததாகவே கூறுவதில் பிழையொன்றுமில்லை. நூறு ஆயிரம் முதலான பெரிய தொகைகளில் சில எண்கள் ஏறினாலும் குறைந்தாலும் பெரிய லக்கமேயிட்டுப் பேசுவது கவிமரபு. இராமானுச நூற்றந்தாதி, பாதுகாஸஹஸ்ரம், திருவாய்மொழியாயிரம், லக்ஷ்மீஸஹஸ்ரம் இத்யாதிகள் காண்க. ... ... ... ... ... *

187. ***ஈரைந்து சீரார் சிரமறுத்துச் செற்றுகந்த செங்கண்மால்*** சிறிய திருமடலில் நோய்தீரக் குறிசொல்லவந்த கட்டுவிச்சி * நும்மகளை நோய் செய்தான் ஆரானுமல்லன் அறிந்தேனவனை நான்—உமக்கறியக் கூறுகேன் * என்று தொடங்கிச்சொல்லிவருகையில் இராவணவதஞ் செய்த இராமபிரானைக் கூறுகின்றாள் [ஈரைந்து சீரார் சிரமறுத்துச் செற்றுகந்த செங்கண்மால்] என்று. * த்விதா பஜ்யேயமப்யேவம் ந நமேயம் து கஸ்யசித் * என்று சொன்ன வணங்காமுடி மன்னவனை இராவணனுடைய சிரங்களுக்குச் **சீரார்** என்று அடைமொழி கொடுத்தது—இராமபிரானது திருக்கையினால் அறுப்புண்டது பற்றியென்க. * சிட்டர் செயல் செய்திலை குலச்சிறுமை செய்தாய் * (கம்பரா.) என்ற கும்பகரணன் கூற்றில் * அவர் வில்லாற் பட்டிடுதுமேல் அதுவுநன்று * என்றது காண்க. ... ... ... ... ... *

188. ***ஈர்கின்ற குணங்களையுடையாய்!*** திருவாய்மொழியில் (8-1-5) * மணந்தபேராயா! மாயத்தால் முழுதும் வல்வினையேனை யீர்கின்ற குணங்களையுடையாய் * என்கிறாராழ்வார். வாள்கொண்டு அறுப்பதுபோல அறுக்கின்றனவாம் எம்பெருமானுடைய திருக்குணங்கள் ஒவ்வொன்றும் ஆழ்வார் தம் முயிரை. "பிரானே! உன் குணங்கள் தேனூறியெப்பொழுதும் தித்திக்கின்றன"

என்னுதே ஈர்கின்றன வென்னுமாழ்வாருடைய கிலேசத்தை யாரேயறிவார். ஒரு ஸௌசீல்யம் ஸௌலப்யம் ப்ரணயித்வம் தயை வாத்ஸல்யம் என்னுமிக் குணங்களை ஆழ்வார்தாம் அநுபவிக்கும்போது அவர் படுகிறபாட்டை அவரது சொல்லிலிருந்துதானே நாம் அறிய முடியும். நிர்க்குணப்ரஹ்மவாதிகளுக்கும், 'தயையாவது பரதுஃக்க துஃக்கித்வமன்று, வாத்ஸல்யமாவது தோஷ போக்யத்வமன்று' என்பார்க்கும் இந்தப் பாசுரம் நெடுந்தூரத்தில் நிற்கவேண்டும். ஆழ்வாரைப் போன்ற ஆழ்வான், பெருமாள் இராவணனை நோக்கி 'இன்று போய் நாளைவா' என்று சொல்லி விடை கொடுத்தனுப்பிய ஒரு குணத்தை நோக்கி (அதிமாநுஷஸ்தவத்தில்) *கோயம் குண: கதரகோடிகத: கியாந் வா கஸ்ய ஸ்துதே: பதம் அஹோ பத! கஸ்ய பூமி: !* என்று ஈடுபடுகின்றார். குணவித்தர்களெனப்படுவார் திரளிலே குணதூஷகர்கள் தலைகாட்டலாகுமோ?

**189. * ஈற்றிளம்பிள்ளை யொருவர்க்குமாயங்களேயரியாற்றி *** திருவாய்மொழி (7-6-10.) கண்ணபிரான் பச்சைப் பசுங் குழந்தையாகவே யிருந்துகொண்டு திருவாய்ப்பாடியிலும் வடமதுரையிலும் செய்த ஆச்சர்ய சேஷ்டிதங்களை யநுஸந்திக்கிறார். *தேனுகன்பிலம்பன்காளிய னென்னுந் தீப்பப்பூடுகளடங்கவுழக்கின மாயங்கள் திருவாய்ப்பாடியில். *வார்கடாவருவி யானைமாமலையின் மருப்பிணைக்கு வடிறுத்துருட்டி, ஊர்கொள் திண்பாகனுயிர் செகுத்து அரங்கின்மல்லரைக் கொன்று சூழ்பரண்மேல், போர்கடாவரசர் புறக்கிட மாடமீமிசைக் கஞ்சனைக் கொன்ற மாயங்கள் வடமதுரையில். இவை யெல்லாவற்றையும் நம்மாழ்வார் (3-10) *சன்மம் பலபல செய்து வெளிப்பட்டு* (5-10.) *பிறந்தவாறும் வளர்ந்தவாறும்* (6-4.) *குரவையாச்சியரோடு கோத்ததும்* என்கிற பதிகங்களிலே ஆச்சரியமாக அநுபவித்திருப்பது காண்க.

**190. * ஈற்றுத்தாய் பின்தொடர்ந்தெம்பிரானென்றழ *** (பெரியாழ்வார் திருமொழி 3-9-4.) *மாற்றுத்தாய் சென்று வனம்போகேயென்றிட வென்னும் பாசுரத்தில் **கூற்றுத்தாய்** என்பதற்கு நிர்வாஹ பேதங்களிருந்தாலும் **ஈற்றுத்தாய்** என்றது கௌஸல்யாதேவியையே யாகும். பெற்றெடுத்த தாய் என்றபடி. மங்களாசாஸனம் பண்ணின அவள், இராமன் வனவாஸம் புறப்படும்போது அழுதுகொண்டு பின்தொடர்ந்ததாகச் சொன்னது வருத்தமிகுதியைச் சொன்னபடி. ... ... ... ... ... *

**191. * ஏனச் சொல்லாயினுமாக. *** நம்மாழ்வார் திருவிருத்தத்தில் (99.) பரமக்ருபையோடு ஒரு பரமார்த்தமருளிச் செய்கிறார் — *ஏனத்துருவாயிடந்த......ஞானப்பிரானையல்லாலில்லை நான் கண்ட நல்லதுவே* என்று. இவ்வாழ்வாரும் பெரியாழ்வாரும் திருமங்கையாழ்வாரும் தம் பக்கல் **விசேஷ** கடாக்ஷம் செய்தருளினவர் வராஹப்பெருமாளென்கிற ஞானப்பிரானென்பதை க்ருதஜ்ஞதை தோற்ற வெளியிட்டுள்ளார்கள்; நம்மாழ்வார் (திருவிருத்தத்தில்) * **பெருங் கேழலார்** தம்பெருங்கண்மலர்ப்புண்டரீகம், நம்மேல் ஒருங்கே பிறழ வைத்தார் * என்றார். பெரியாழ்வார் (5-2-3.) * எயிற்றிடைமண் கொண்ட வெந்தை இராப்பகலோதுவித் தென்னைப், பயிற்றிப் பணிசெய்யக் கொண்டான் * என்றார். திருமங்கையாழ்வார் (1-1-4) * பன்றியாயன்று பாரகங் கீண்ட பாழியானாழியானருளே, நன்று நானுய்ய * என்றார். * ஞானப்பிரானை யல்லாலில்லை நான் கண்ட நல்லதுவே * என்று இங்குச் சொல்ல நினைத்த ஆழ்வார் பாசுரந் தொடங்கும்போதே * ஏனச் சொல்லாயினுமாக * என்றது தம்முடைய பரம கருணையைக் காட்டி நிற்கும். ... ... *

192. * ஈனமாயவெட்டு நீக்கி * (திருச்சந்தவிருத்தம் — 114.) நீக்க வேண்டிய ஈனமான எட்டு எவை யென்னில்; அவித்யை, கருமம், வாஸனை, ருசி, ப்ரக்ருதிஸம்பந்தம், ஆத்யாத்மிக — ஆதிதைவிக — ஆதிபௌதிகங்க ளென்கிற தாபத்ரயம்—ஆக இவை யெட்டு. (அல்லது) காமம், குரோதம், லோபம், மோஹம், மதம், மாச்சரியம், அஜ்ஞானம், அசூயை ஆகிற எட்டுமாம். இவற்றுள் காமமாவது—விரும்பின பதார்த்தத்தை அநுபவித்தே தீரவேண்டும்படியான அவஸ்தை; குரோதமாவது — அப்படி விரும்பின பொருள் கிடையாதொழிந்தால் அணுகினவர்கள்மேல் பிறக்கும் சீற்றம்; லோபமாவது — கண்டபதார்த்தங்களிலும் அளவற்ற அபேக்ஷை; மோஹமாவது—க்ருத்யாக்ருத்ய விவேகமில்லாமை; மதமாவது-பொருள் முதலானவை கிடைப்பதனாலுண்டாகும் களிப்பு; மாச்சரியமாவது—பிறர் மினுக்கம் பொறுமையை அனுட்டான பரியந்தமாக நடத்துகை; அஜ்ஞானமாவது—இவற்றால் மேல்வரும் கெடுதியை நிரூபிக்கமாட்டாமை; அசூயையாவது—குணங்களிலே தோஷத்தை ஆவிஷ்கரிக்கை. இவை ஆத்மாவுக்கு ஈனத்தன்மையை விளைக்குமவையென்க. ... ... ... ... *

193. * ஈன்ற முதல்தாய் சடகோபன் *மொய்ம்பால் வளர்த்த இதத்தாய் இராமாநுசன். * திருவாய்மொழித் தனியன்களில் ஒன்றான *வான் திகழுஞ்சோலைப்பாசுரத்தின் பிற்பகுதி இது. இது பட்டரருளிச்செய்த வெண்பா. 'திருவாய்மொழியைப் பெற்ற தாய் நம்மாழ்வார்; வளர்த்த தாய் எம்பெருமானார்' என்கிறது இதில். மணவாள மாமுனிகளருளிச் செய்த உடையவரது வாழிதிருநாமத்திலும் * மாறனுரை செய்த தமிழ்மறை வளர்த்தோன்வாழியே * என்றருளிச் செய்யப்பட்டுள்ளது. திவ்யப்ரபந்தங்களை எம்பெருமானார் வளர்த்தவிதம் யாது? என்று பலர் கேட்பதுண்டு. விளங்கச் சொல்லுகிறேன் கேண்மின். * சொல்லார் தமிழொரு மூன்றும் சுருதிகள் நான்கும் எல்லையில்லாவறநெறி யாவுந் தெரிந்தவன் * என்று இராமானுச நூற்றந்தாதியில் (44) போற்றப் பெற்ற எம்பெருமானார்க்குத் தமிழறிவில் சங்கிப்பார் ஆருமில்லை. திவ்யப்ரபந்தங்களிலுள்ள அர்த்த விசேஷங்களை ஸ்ரீ பாஷ்யத்திலும் கீதாபாஷ்யத்திலும் கத்யத்ரயத்திலும் ஆச்சரியமாகப் பதிய வைத்தருளியிருப்பதை அடியேன் த்ரமிடோபநிஷத் ப்ரபாவஸர்வஸ்வ நூலில் விரியவுரைத்திருப்பது தவிர. உபந்யாஸங்கள் தோறும் விளக்கி வருவதை உலகமுணரும். முக்கியமாக நிரூபிக்க வேண்டிய விஷயங்களைப் புறச்சான்று கொண்டும் அகச்சான்று கொண்டும் மூதலிப்பது முறை. இவ்விஷயத்தில் *ஏய்ந்த பெருங்கீர்த்தி யிராமானுச முனிதன், வாய்ந்த மலர்பாதம் வணங்குகின்றேன் — ஆய்ந்த பெருஞ், சீரார் சடகோபன் செந்தமிழ் வேதந்தரிக்கும், பேராதவுள்ளம் பெற* என்பது முதலான தனியன்களும், *மாறனடிபணிந்துய்ந்தவிராமானுசன்* என்பது முதலான இராமானுச நூற்றந்தாதிப் பாசுரங்கள் பலபலவும் புறச்சான்றுகளாம். அவற்றைவிட அகச்சான்றுகளையே அடியேன் அதிகமாகக் காட்டுபவன். எம்பெருமானாருடைய திவ்யஸூக்திகளில் அருளிச் செயல் விசேஷார்த்தங்களே அதிகமாக கமழ்கின்றன வென்பதைச் சில பாக்கியசாலிகளே அறிந்து அநுபவிக்க வல்லவர்கள். ஆளவந்தார் ஸ்ரீஸூக்திகளில் இது பரிமிதம். உடையவர் ஸ்ரீஸூக்திகளில் கொள்ளை கொள்ளையானவை. நிதிபோல் புதைந்து கிடப்பவை. திருவாராதனத்தில் அருளிச் செயல் ஸேவித்துச் சாத்துமுறை செய்யவேணுமென்பதை ஸ்வாமி தமது நித்ய க்ரந்தத்தின் முடிவில் "ச்ருதிஸுகை: ஸ்தோத்ரை: அபிஷ்டூய"

என்பதனால் காட்டியருளினர். *செவிக்கினிய செஞ்சொற்களாலே* என்றபடி. இவ்வண்ணமாகவே நுட்பமாகக் காட்டியருள்வது எம்பெருமானாரியல்பு. சிக்ரமானவொரு விஷயத்தை இங்குப் பொறித்திடுகின்றேன். ஸ்ரீபாஷ்யத்தில் கடைசியாக முடிக்கும் ஸ்ரீஸூக்தி என்னவென்று பார்ப்போம். "ய ஏவமாஹ" என்றாரம்பித்து 'வாஸுதேவஸ் ஸர்வமிதி ஸ. மஹாத்மா ஸுதுர்லப:* இதி. என்பது ஸ்ரீபாஷ்யத்தின் முடிவான ஸ்ரீஸூக்தி ஸூத்ரம் என்னவென்றால் *அநாவ்ருத்திச் சப்தாத்* என்பது. "முக்தாத்மா திருநாட்டிலிருந்து திரும்பி வருவதில்லை, சாஸ்த்ரம் அங்ஙனே சொல்லியிருக்கையாலே" என்பது ஸூத்ரத்தின் பொருள்; சாஸ்த்ரம் இன்னதென்பதைக் காட்டவேண்டும்; அது காட்டியாயிற்று. *ஸ கல்வேவம் வர்த்தயந்* இத்யாதியான உபநிஷத் வாக்யமும் *மாமுபேத்ய து கௌந்தேய! புநர்ஜந்ம ந வித்யதே* என்கிற கீதாவசனமும் காட்டியாயிற்று. ஸூத்ர வியாக்கியானம்செய்வனே முடிவு பெற்றதாயிற்று. பின்னை *ப்ரியோ ஹி ஜ்ஞாநிந:* என்று தொடங்கி *ஸ மஹாத்மா ஸுதுர்லப:* என்னுமளவாக விஸ்தரம் செய்திருப்பது எதற்காக? என்று விமர்சிக்க வேண்டுவது மிக அவசியமாகும். விஜ்ஞாபிக்கிறேன், குறிக்கொண்மின். ஸூத்ரகாரர் கூறியபடி [சப்தாத் என்று சொன்னபடி] சாஸ்த்ரத்தைக் காட்டி மீட்சியில்லையென்று நிரூபித்தாயிற்று. அதன் மேலும் பூர்வபக்ஷம் தோன்றும்; ஈச்வரனே கேட்பாரற்ற சுதந்திரன்; நிரங்குசஸ்வதந்த்ரனெனப்படுகிறான். *நாஸௌ புருஷகாரேண ந சாபி அந்யேந ஹேதுநா, கேவலம் ஸ்வேச்சயைவாஹம் ப்ரேக்ஷே கஞ்சித் கதாசந* என்று பேசுபவன். அவன் சாஸ்த்ரத்தையும் மீறி முக்தாத்மாவை நோக்கி 'மீண்டொழிந்து போ' என்று சொல்லித் தள்ளிவிட்டால் தடுப்பாருண்டா? யாரே தடுக்கவல்லார்? என்று சோத்யம் விளைந்தே தீரும். இந்த சோத்யம் சங்கராசார்யாதிகளான இதர பாஷ்யகாரர்களுக்குத் தோன்றவில்லை. நமது பாஷ்யகாரருக்குத் தோன்றிற்று. அருளிச்செயற்கடலில் அமுதமானவொரு பொருளை யெடுத்து வெளியிடுவதற்காகத் தோன்றிற்று. அதைப் பூர்வபக்ஷமாக வைத்துக் காட்டாமல் ஸமாதானத்தை மட்டும் மிகவழகாகக் காட்டியருளினர் — "ந ச பரம புருஷஸ் ஸத்யஸங்கல்ப: அத்யர்த்தப்ரியம் ஜ்ஞாநிநம் கதாசித் ஆவர்த்தயிஷ்யதி" என்கிற ஸ்ரீபாஷ்யஸூக்தியாலே, இதன் பொருளாவது — எம்பெருமான் தன்னுடைய பரமப்ரீதிக்கு இலக்கான ஞானியை ஒருநாளும் திருப்பியனுப்பமாட்டானென்பதாம். இவ்விஷயத்திற்கு ப்ரமாணமாக "ய ஏவமாஹ" என்று தொடங்கி *ப்ரியோ ஹி ஜ்ஞாநிநோத்யர்த்தம் அஹம் ஸ ச மம ப்ரிய:* என்கிற கீதாச்லோகத்தை [பகவத் வசனத்தை] எடுத்துக் காட்டினார். அவ்வளவே போதுமானது. அதற்கு மேலும் *வாஸுதேவஸ் ஸர்வமிதி ஸ மஹாத்மா ஸுதுர்லப:* என்னுமளவும் எதற்காக எடுத்துக் காட்டினாரென்று ஆராய வேண்டும். கேண்மின்; கீழே காட்டிய ஸ்ரீபாஷ்ய பங்க்தியில் "அத்யர்த்தப்ரியம் ஜ்ஞாநிநம் ந கதாசித் ஆவர்த்தயிஷ்யதி" என்றிவ்வளவே ஸாதித்திருக்கவில்லை. இடையில் லப்த்வா என்றொரு விலையுயர்ந்த பதத்தை ப்ரயோகித்தருளியுள்ளார். அந்தப் பதம் இல்லாமலே வாக்கியம் அந்வயிக்காமற் போகாது. எளிதாக அந்வயிக்கும். "அத்யர்த்தப்ரியம் ஜ்ஞாநிநம் ந கதாசித் ஆவர்த்தயிஷ்யதி" என்றால் இதில் அநந்வயம் ஒன்றுமில்லையே. இடையில் லப்த்வா என்றொரு பதத்தை இட்டருளினது த்ராவிட வேதாந்த ஸாரார்த்த பரமார்த்தத்தை விளக்குவதற்கேயாம். 'சேதநலாபம் ஈச்வரனுக்கே யொழிய ஈச்வரலாபம் சேதனனுக்கன்று' என்கிற ஸத்ஸம்ப்ரதாயார்த்த நிதியன்றோ இங்கு வாரிபளிக்கப்பட்டது. ஆழ்வார்

*யானொட்டி யென்னுள் இருத்துவமென்றிலன், தானொட்டி வந்தென் தனி நெஞ்சை வஞ்சித்து, ஊனொட்டி நின்றென்னுயிருள் கலந்து, இயல்வானொட்டுமோ இனியென்னை நெகிழ்க்கவே.* (திருவாய்மொழி 1–7–7) என்றருளிய பாசுரத்தை அக்ஷரச: அடியொற்றியன்றோ ஸ்ரீ பாஷ்யஸூக்தி அவதரித்துள்ளது. ஜ்ஞாநியான வொருவனைப் பெறுவதற்கு எம்பெருமான் எவ்வளவோ பாடுபட்டவனாயிருந்து, அப்படிப்பட்ட ஞானியைப் பெற்றபின்பும் போய்விடு என்று தள்ளுவனோ? என்கிற பொருள் தோன்றவே லப்த்வா என்கிற பதத்தைச் சேர்த்தருளினார்; எம்பெருமான் ஞானியான சேதனனைத் தேடுகிறான், தேடிப் பெற்றால் களிக்கிறான், பெறாவிட்டால் வருந்துகிறான் என்பதைக் காட்டவே, [லப்த்வா என்ற தமது ஸூக்திக்கு ப்ரமாணமாகவே *ஸ மஹாத்மா ஸுதுர்லப:* என்னுமளவும் உதாஹரித்தது. இத்தகைய பல நூறு அருளிச்செயலர்த்த விசேஷங்களை அமைத்தருளினதுபற்றி *மொய்ம்பால் வளர்த்த இதத்தாய் இராமானுசன்* என்று பணித்தது. முக்கியமாக ஒரு வார்த்தை; ''ஸர்வதேச தசா காலேஷு அவ்யாஹத பராக்ரமா, ராமாநுஜார்ய திவ்யாஜ்ஞா வர்த்ததாம் அபிவர்த்ததாம்'' என்கிற ச்லோக ரத்னத்தை ஸ்ரீபாஷ்ய காலக்ஷேபாதிகளில் ஸேவிக்கின்றிலோம். பகவத்விஷய ரஹஸ்யாதி காலக்ஷேபங்களிலும் ஸேவிக்கின்றிலோம். அருளிச்செயல் கோஷ்டிகளில் மட்டுமே ஸேவித்து வருகிறோம். இதனாலும் *மொய்ம்பால் வளர்த்த இதத்தாயான இராமாநுசருடைய பெருமையை யுணரலாம். ... ... *

194. *ஈன்றோளிருக்கமணை நீராட்டி* திருவாசிரியத்தில் *ஓஓ! உலகினதியல்வே! * என்கிற ஆறும்பாட்டு—ஸம்ஸாரிகள் படும் துர்க்கதிகளைக் கண்டு ஆழ்வார் அழுதுகொண்டே ஸாதிக்கிற பாசுரமாம். எம்பெருமான் செய்தருளின பல்பல மஹோபகாரங்களைப் பேசி, இப்படிப்பட்ட பெருமான் திறத்தில் நன்றி பாராட்டாதே நன்றியறிவுகெட்ட பாவிகளாய் அனர்த்தப்பட்டொழிகிறீர்களே! என்று பரிதபித்தருளிச் செய்யுமிடையில் *ஈன்றோளிருக்க மணைநீராட்டி * என்கிற அருளிச்செயல் உள்ளது. இது த்ருஷ்டாந்தகர்ப்பமான திருவாக்கு. ஈன்றோளிருக்க மணை நீராட்டுமா போலே யென்று விரித்துக் கொள்ளவேணும். இந்தப் பாசுரத்தைத் திருமங்கையாழ்வார் பெரியதிருமொழியில் (11-6.) *மைந்நின்ற கருங்கடல்வாயுலகின்றி யென்கிற ஒந்யதிகமாக விவரித்தருளுகிறார். அதில் (6.) *புதுத் தெய்வங் கொண்டாடுந் தொண்டீர்! பெற்றதாயிருக்க மணைவெந்நீராட்டுதிரோ மாட்டாத தகவற்றீரே* என்றருளியது காண்க. [*ஈன்றோளிருக்க மணை நீராட்டி*] மணை என்றது அசேதந வஸ்துக்களை யெல்லாஞ் சொன்னபடி. நீராட்டி என்றது உபசாரங்கள் பலவற்றையும் சொன்னபடி. 'மணை நீராட்டுமாபோலே' என்று சொல்ல வேண்டுமிடத்து (அவாய் நிலையாக) உவமையை உள்ளடக்கி 'மணை நீராட்டி' என்றே சொன்னதன் கருத்து யாதெனில், தேவதாந்தர பஜனம் பண்ணுவதோடு மணை நீராட்டுவதோடு ஒரு வாசியில்லை; அதுதான் இது. இதுதான் அது என்று இரண்டுக்குமுள்ள அபேதத்தைக் காட்டினபடியாம். *ராஜஸேவா மநுஷ்யாணாம் அஸிதாராவலேஹநம்* என்கிற வடமொழி வழக்குப் போன்றிது. மாதர்கள் ப்ரஸவித்தவுடனே பெற்ற அத்தாயையும் பிறந்த சிசுவையும் ஸ்நாநஞ் செய்வித்தல் மலைநாட்டு வழக்கமாக வெகு முற்காலத்தில் இருந்ததாம். ப்ரஸவித்தவுடனே தாயை நீராட்டுவது பலவகைக் கஷ்டங்களுக்குக் காரணமாவதால் அத்தாய்க்குப் பதிலாக ஒரு மணைக்கட்டையை ஸ்நாநஞ் செய்விப்பது இடைக்காலத்து வழக்கமாக இற்றைக்கும் நடந்து வருகின்ற

தாம். அதனைத் திருவுள்ளம்பற்றி இங்கு ஆழ்வார் இப்படியருளிச் செய்தார் என்று சிலர் சொல்லுவர். ... ... ... ... *

— உ —

**195. * உகக்கு நல்லவரொடு முழிதராயே. *** திருவாய்மொழியில் (10 - 3.) * வேய்மருதோளிணையில் ஆழ்வாருடைய அநுபவம் விலக்ஷணமானது. கண்ணா! நீ விடிந்ததுமெழுந்திருந்து பசு மேய்க்கப் போகலாகாது; உனக்கு விருப்பமான பெண்களோடே நீ கலந்திருந்து போதுபோக்குவதை நான் தடை செய்யவில்லை; என்னையொழிய வேறு பெண்களோடு நீ ரமித்தாலும் அதை நான் மறுக்கவில்லேன்; எவ்விதத்திலும் நீ காட்டுக்குச் செல்லாமலிருப்பதே எனக்கு வேண்டுவது என்று பராங்குசநாயகி சொல்லுமிப் பதிகத்தில் * நீயுகக்கு நல்லவர் * என்று கூறியிருப்பது கண்ணபிரானுக்குப் பரமபோக்யமான வார்த்தையாம். கண்ணபிரான் விரும்பும் பெண்கள் மூன்று வகுப்பாகவுள்ளார்கள். ஆசார்யஹ்ருதயத்தில் ''மச்சொடு மாளிகை அவ்வவ் விடம்புக்கு வாரிச் சிதைத்துப் பறித்துக் கிழித்துக்கோயின்மைகுறும்பு செய்து அல்லல் விளைத்துக் கவருமுகக்கு நல்லவர், முழுசியாவரென்னும் தேன்மொழியாலே கோகுலத்தை மறப்பிக்கும் நகரஸ்த்ரீகள், நரகனைத் தொலைத்துக் கவர்ந்த பதினாறு பல்லாயிர மெண்ணிறந்தார்......'' என்றருளிய சூர்ணையில் அந்த மூன்று வகுப்புகள் காணத்தக்கன. 1. திருவாய்ப்பாடியாய்ச்சிகள். 2. * மதுராம் ப்ராப்ய கோவிந்த: கதம் கோகுலமேஷ்யதி, நகரஸ்த்ரீகலாலாப மது ச்ரோத்ரேண பாஸ்யதி * என்றும் * ஸுப்ரபாதாத்ய ரஜநீ மதுராவாஸ யோஷிதாம் * என்றும் அந்தக் கோபிகள் ப்ரஸ்தாவித்த மதுரைப் பெண்கள்; 3. நரகாசுரவதஞ் செய்தபின் அவன் சிறையிலடைத்து வைத்திருந்து கண்ணபிரானால் கவரப்பட்டு த்வாரகையிற் கொணர்ந்து மணஞ் செய்து கொள்ளப்பட்ட பதினாறுயிரவர் தேவிமார். ... ... ... *

**196. * உகந்துகந்துண் மகிழ்ந்து குழையுமே *** திருவாய்மொழி (6 - 5 - 4) துலைவில்லி மங்கலத் திருப்பதியில் ஆழ்வாருடைய ஈடுபாட்டைக் கூறும் தோழியின் பாசுரம் இது. தோழி பாசுரமானாலென்ன? தாய்ப்பாசுரமானாலென்ன? பாசுரம் பேசுகிறவர் ஆழ்வாரேயன்றோ. பகவத் விஷயத்தில் அபிநிவேசித்து ஆழ்வார்தாம் படுகிறபாடுகளை இவரது பாசுரங்களிலும், அடுத்தபடியாகத் திருமங்கையாழ்வாருடைய பாசுரங்களிலுமே நாம் கண்டநுபவிக்க முடியும். பெரியாழ்வார் திருமொழியில் (3. - 7) * ஐயபுழுதியுடம்பளைந்து * (3 - 8.) * நல்லதோர் தாமரைப் பொய்கை * இவ்விரண்டு பதிகங்களிலே அவரது அநுபவப்ரகாரத்தைச் சிறிது காணலாமத்தனை. * உகந்துகந்துண் மகிழ்ந்து குழையுமே * என்னும்படியாக ஆழ்வார்க்கு உண்டான நிலை ஒரு மஹர்ஷிக்கு உண்டாகக் கண்டதுண்டோ? எங்ஙனே காண முடியும்? ஆசார்ய ஹ்ருதயத்தில் ''அழுநீர் துளும்பக் கடலும் மலையும் விசும்புந்துழாய்த்திருமாலென்றெங்கே காண்கேனென்னுமிவரலமாப்பு அவர்களுக்குப் புத்ரவியோகத்திலே'' என்ற சூர்ணையை வியாக்கியானத்தோடு ஸேவிக்க. ... ... ... ... ... *

(தொடரும்)

(ராப்பர் இரண்டாம் பக்கத்தின் தொடர்ச்சி)

ஸ்ரீ ஸ்வாமிகள் உபந்யாஸ வெள்ளமென்று பெயரிட்டுப் பல உபந்யாஸ நூல்களை வெளியிடத் தொடங்கியபோது "ஆங்காங்கு உபந்யாஸம் செய்யும் புலவர்கள் இவருடைய புத்தகங்களைக் கொண்டுதான் பிரஸங்கம் செய்யவேணுமோ? என்று சொன்னவர்களையும் கண்டிருக்கிறேன். கல்கி ஆபீஸில் ஆசிரியர் குழுவில் துணை புரிந்துவந்த ஒரு பெரியவர் பலரிடம் சொல்லிவந்த ஒரு வார்த்தையை எழுதுகிறேன். "எனக்கு ஒருசமயம் சுமுகனென்னும் அரவரசனைப் பற்றி ஆராய்ச்சிக் கட்டுரையொன்று எழுத அவசியம் நேர்ந்தது. இந்த சரிதையை ஆழ்வார்களில் எவரெவர் எடுத்துக் கூறியிருக்கிறார்களென்று தெரிந்துகொள்ளவேண்டி ஏழெட்டு வைஷ்ணவப் பண்டிதர்களை யடுத்தேன், ஒவ்வொருவரும் 'கேட்டுச் சொல்லுகிறேன், பார்த்துச் சொல்லுகிறேன், எழுதி யனுப்புகிறேன்' என்றார்கள். அப்போது ஒருவர் சொன்னார்—காஞ்சீபுரம் ஸ்வாமிகளைக்கேட்டால் உடனே விளக்கமாகத் தெரிந்துவிடும் என்று. எனக்கு அவசரமா யிருந்தபடியால் உடனே காஞ்சீபுரத்திற்கு ஓடினேன். காலை ஏழுமணிக்கு P. B. A. ஸ்வாமிகளின் திருமாளிகைக்குச் சென்று சேர்ந்தேன், அப்போது அவர்கள் தீர்த்தமாடி வஸ்திரம் தரித்துக்கொண்டிருந்தார். என்னைக் கண்டவுடனே அன்பாக விசாரித்து என்ன விசேஷம் என்றார். வந்தகாரியம் இன்னதென்று சொன்னேன். சொன்னவுடனே ஸ்வாமிகள் காதில் பூணூலைச் சுழற்றிக்கொண்டிருந்தபடியே "இன்ன ஆழ்வார் இன்ன பிரபந்தத்தில் இத்தனையாவது பாட்டில் இப்படி யிப்படி கூறியிருக்கிறார்" என்று நின்றபடியே சொல்லிவிட்டார்' அடுத்த நிமிஷத்திலேயே காகிதத்தில் குறிப்பெடுத்துக்கொண்டு வந்துவிட்டேன் என்று. இதை அப்பெரியார் எனக்குத் தெரிந்த நாலுபேர்களிடம் சொல்லியிருக்கிறார். 

சென்னை கவர்னர் உயர்திரு K. K. ஷா அவர்கள் ஒருசமயம் திருவல்லிக்கேணிக்குவந்து பிரசங்கம் செய்தபோது "வேதத்தில் என் கேள்விகளுக்கெல்லாம் உடனுக்குடனே திருப்திகரமாக பதில் சொல்லுபவர் காஞ்சீபுரம்ஸ்வாமி ஒருவரே" என்று சொன்னதைக் கேட்டிருப்பவர்களும் பலபேர்களுண்டு. ஸ்ரீமான் உ. வே. பாலபண்டிதமணி ஸ்ரீரங்கம் திருமலாசாரிய ஸ்வாமிகள் ஓராண்டு திருவல்லிக்கேணி சந்நிதியில் திருப்பாவை சொற்பொழிவு நடத்தியபோது ஒருநாள் சபையில் சொன்னதாவது—சில பேர்கள் என்னிடம்வந்து நீர் அண்ணங்கராசாரியர் எழுதியிருக்கிற அர்த்தங்களையெல்லாம் சொல்லுகிறீர்களே, என்னே? அதற்கு நான் 'நீங்கள் பெரியவாச்சான்பிள்ளையும் மணவாளமாமுனிகளும் சாதித்த அர்த்தங்களைச் சொல்லுகிறீர்களே, என்ன?" என்றுகேட்டேன்; ஓஹோ, அப்படியோ? என்று சொல்லிக்கொண்டு போய்விட்டார்கள்—என்று சொற்பொழிவினிடையில் சொன்னதையும் கேட்டிருக்கிறார்கள் பலர். 

தற்போது காஞ்சீபுரம்ஸ்வாமிகள் திவ்யப்ரபந்தமஹாநிதி யென்று பெயரிட்டு வெளியிடத் தொடங்கியிருக்கும் நிகரில்லாததொரு நூலைக் காணும்போது இதுவரை அசூயை கொண்டிருந்தவர்களும் பொறாமை நீங்கிப் புகழத் தொடங்கியிருப்பது வியக்கத்தக்கதன்று. திவ்யப்ரபந்தப் பாசுரத்துணுக்குகளை விவரிப்பதென்கிற ஒரு வியாஜம் வைத்துக்கொண்டு உபயவேதாந்தப் பொருள்களையும் காவ்ய நாடகாலங்காரப்பொருள்களையும், கம்பராமாயணம் ச்ருங்கார பிரபந்தங்கள் முதலானவற்றையும் ஆங்காங்கு எடுத்துக்காட்டி இனிமைப்படுத்திவருமழகு பொறாமையுள்ளவர்களையும் பரவசப்படுத்துகின்றது. ஸ்வாமி ஒருவர் தவிர மற்ற எவராலும் இந்த மஹாநிதியைச் சேகரிக்கமுடியாதென்று சொல்லாதவர்கள் இல்லை.

## P. B. அண்ணங்கராசார்ய ஸ்வாமிகளின் நூல் துறைகள்.

1. நாலாயிர திவ்யப்பிரபந்த வுரைகள்,
2. பூர்வாசார்ய தமிழ்ப்பிரபந்த ,,
3. ஸகல பூர்வாசார்ய ஸ்தோத்ர ,,
4. ஆழ்வாராசார்யப் பிரபாவ நூல்கள்,
5. இதிஹாஸ புராண சரித்திர ,,
6. ரஹஸ்யார்த்த விளக்க ,,
7. வேதாந்தப் பொருள் விளக்க ,,
8. ஸத்ஸம்ப்ரதாயார்த்த விளக்க ,,
9. வேதவிசாரலக்ஷண நூல்கள்.
10. லோகாபிராம உபன்யாஸ நூல்கள்
11. பரபக்ஷப்ரதிக்ஷேப நூல்கள்
12. உபந்யாஸக ஸௌபாக்ய வெளியீடு
13. வடமொழி நூல் திரள்கள்,
14. ஹிந்தி பாஷையில் நூல்கள்
15. தெலுங்கு பாஷையில் ,,
16. பூர்வாசார்ய க்ரந்த வெளியீடுகள்.

விரிவான கேடலாகுகள் தருவித்து விவரங்காண்க

சந்தாப்பணம் M. O. செய்பவர்கள்

*Editor*, GRANTHAMALA, Kancheepuram-631503.

என்ற விலாசத்திற்கு அனுப்புக.

If un-delivered please return to:

P. B. ANNANGARACHARYA,

KANCHIPURAM. Pin Code 631503

To

Sriman / Srimathi





Edited and Published by P. B. Annangaracharya Swami
for Madras Sathgrantha Prakasana Sabha.
Printed by T. A. P. Srinivasavaradan at Sri Venkateswara Press,
Sannidhi Street, Kancheepuram-631503.